ஜனவரி 2024

# மரபாளர்

தடயங்களைத் தேடி



## ‘மாணவர்கள் மீட்ட மரபுச் சின்னம்

தனிச்சுற்றுக்கு மட்டும்

# மரபாளர்

பயணம்: 3 பதிவு: 1

அனைவருக்கும் வணக்கம்,

மரபுசார் வரலாறு மீது ஆர்வமுள்ள வரலாற்று ஆய்வாளர்கள், ஆர்வலர்கள் மற்றும் மாணவர்கள் தங்கள் வரலாற்றுத் தேடலைப் பதிவு செய்யும் களமாக நமது ஹெரிட்டேஜர் இதழ் திகழ்ந்து வந்துள்ளது. இனி ஹெரிட்டேஜர் "மரபாளர்" என்ற பெயரில் மின்னிதழாக வெளிவருகின்றது.

மரபாளர் இதழின் நோக்கம் மக்களிடையே உள்ள பண்பாட்டுத் தொடர்புகள், வரலாற்று அடையாளங்கள், சடங்குகள், மரபுசார் அறிவு, பதியப்படாத வரலாற்றுத் தகவல்களைத் திரட்டி அளிப்பதோடு, இலக்கியம் மற்றும் வரலாற்றை மீண்டும் வாசிக்கும் தளமாக இது இருக்க வேண்டும் என்பதே.




அட்டைப் படம்:
"மாணவர்கள் மீட்ட நடுகல். R.S Saravanan"

இவ்விதழுக்கு ஆய்வாளர்கள், ஆய்வு மாணவர்கள் முதல், ஆர்வலர்கள், மரபுசார் அறிவுடையோர், கல்வியாளர்கள், மாணவர்கள் என பங்களிக்க விருப்பமுள்ளோர், பின் வரும் தலைப்புகளில் தங்களின் கட்டுரைகளைத் தகுந்த மேற்கோள்களுடன் எங்களுக்கு அனுப்பி வைக்கவும்.

1. தொல்லியல்,
2. கல்வெட்டு,
3. மரபு பயணங்கள்,
4. நிகழ்வுகள்,
5. மரபுசார் தொழில்கள்,
6. கலைஞர்கள்,
7. பழைய கட்டுமானங்கள்
8. கோவில்,
9. இலக்கியம்,
10. வரலாற்றில் முக்கியம் வாய்ந்த இடங்கள், மனிதர்கள், நாட்கள்,
11. திணைக் குடிகள்,
12. பழங்கால அரசியல்,
13. பழங்கால வணிகம்,
14. சமூக இனக்குழு வரலாறு,
15. நாட்டார் வழக்காற்றியல்,
16. பன்னாட்டு தமிழர் வரலாறு,
17. தென்னக வரலாறு,
18. ஊர் வரலாறு,
19. தொழில் நுட்ப வரலாறு,
20. பழம் பொருட்கள் வரலாறு,
21. பன்னாட்டு வரலாறு,

சுமார் நான்காண்டுகளுக்கு முன்பு வெளிவருவதை நிறுத்திக்கொண்ட இந்த இதழை மீண்டும் கொண்டு வரவேண்டும் எனத் தொடர்ந்து நம்பிக்கை அளித்து, அதனை உருவாக்கும் பணிக்கு உதவிய நண்பர்களுக்கு இவ்விதழ் சமர்ப்பணம்.

நன்றியும் அன்புடன்
இராஜசேகர் பாண்டுரங்கன்

இணையம்: www.heritager.in
மின்னஞ்சல்: heritagersociety@gmail.com
கைப்பேசி: +91 9786068908

# கொல்லிமலை கற்குவை

## A.T மோகன், சேலம்

இறந்தவரின் உடலை வறிதே மூடாமல் அவ்வுடலைப் பதுக்கையில் இட்டு மறைப்பது பண்டைய வழக்கம் . பதுக்கையின்மேல் கல்கொண்டு மறைப்பர் . இது கற்குவை எனப்படும் .

"அம்புவிட வீழ்ந்தோர் வம்பப் பதுக்கை"

"ஆள் அழித்து உயர்ந்த அஞ்சுவரு பதுக்கை" எனச் சங்க இலக்கியமும் கூறும். பூமியின் உள் பதுக்கப்பட்டிருப்பது பதுக்கை ஆயிற்று. அப்பதுக்கைகளின் மேல் நினைவாகவோ அடையாளத்திற்கோ கற்களை நட்டனர்.



முதலில் இப்பெருங்கற்படைச் சின்னங்களில் நடப்பட்ட கற்களில் உருவங்கள் எதுவும் இன்றி நீண்டுயர்ந்த கற்களாகவே அவை இருந்தன. இதனை நெடுங்கல் , நெடுநிலை நடுகல், ஓங்கிய கல் , பெருங்கல் என இலக்கியங்கள் சுட்டும். இவ்வாறு நடப்பட்ட நீண்ட கற்கள் காலப்போக்கில் உருவமும், பெயரும், பெருமையும் எழுதிய அல்லது பொறித்த நடுகற்களாக மாறின. முதலில் நடுகல்லில் உருவங்கள் ஓவியமாகத் தீட்டப்பட்டன. பின்னாளில் அவை உளி குயின்ற சிற்பங்களாக அமைக்கப்பட்டன என்பர் . "

"பரலுடை மருங்கின் பதுக்கை சேர்த்தி
மரல்வகுந்து தொடுத்த செம்பூங் கண்ணியொடு
அணிமயில் பீலிசூட்டி பெயர் பொறித்து
இனி நட்டனரே கல்லும்"

"வில்லேர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்
வல்லாண் பதுக்கைக் கடவுள் பேண்மார்
நடுகல் பீலி சூட்டி" என்ற பாடல் தொடர்களால் இதனை அறியலாம்.

சங்க கால தமிழர்களின் வாழ்வியல் குறித்த கற்குவை எனும் ஈமச்சின்னம், கொல்லிமலை சாரல் அருகே முள்ளுகுறிச்சியில் இருந்து கொல்லிமலை செல்லும் வழியில் நெவர்காடு கிராமத்தின் பேருந்து நிறுத்தத்தில் இருந்து பிரியும் கிளை சாலை வாழியாக மலை முகட்டை அடைந்தால் , அங்கு பொண்ணு குத்தி அம்மன் எனவும் , காளியாய் கோயில் எனவும் ஊர் மக்களால் அழைக்கப்படும் பகுதியில் அமைந்துள்ளது. இங்கு ஒரே இடத்தில் பதினான்கு கற்குவைகள் நல்ல நிலையிலும் பல சிதைந்த நிலையிலும் காணப்படுகின்றன.இந்த கற்குவை, 2,500 ஆண்டுகளுக்கு முற்பட்டு வாழ்ந்த தமிழர்களின் வாழ்வியல் முறைகளை விளக்கும் பெருங்கற்கால நினைவு சின்னங்களில் ஒன்று.

கற்குவைகள் என்பவை பெருங்கற்கால மக்களின் ஈமச்சின்னங்கள் ஆகும். அன்றைய காலத்து மக்கள் இறந்தவர்களை அடக்கம் செய்துவிட்டு அந்த இடத்தை அடையாளம் காண்பதற்காகப் பல குறியீடுகளை அமைத்திருந்தனர். அவை, கல்வட்டம், கற்திட்டை, கற்பதுக்கை, நெடுங்கல் போன்ற சொல்லில் அடங்கும். இந்த வரிசையில்தான் கற்குவை என்ற அமைப்பும் அடங்குகிறது. இதன் பொருளைப் புரியும்படி சொன்னால், இறந்தவரை அடக்கம் செய்த பின்னர், அதற்கு மேலே பல கற்களை குவியலாக குவித்துவைத்து, அந்த இடத்தை அக்கால மக்கள் அடையாளப்படுத்தியிருந்தனர்.

பழங்காலதமிழர்கள், இறந்தவர்களின் உடல்களை முழுமையாக அடக்கம் செய்ய மாட்டார்கள். மாறாக, அந்த உடலை வீணாக்காமல், பெரிய காடுகள் அல்லது மலைப்பகுதிக்கு கொண்டு சென்று, அங்குள்ள விலங்குகளுக்கு உணவாக வைத்து விடுவர்.பதினாறு நாட்கள் அல்லது, 40 நாட்கள் கழித்துச் சென்று, விலங்குகள் தின்றதுபோக, எஞ்சியுள்ள எலும்புகளை, பானைக்குள் சேகரித்து வைப்பர். அதனுடன், இறந்தவர்களின் ஆடைகள் அவர்கள் பயன்படுத்திய பொருட்களையும் போட்டு, குழி தோண்டி புதைத்து விட்டு, அதன் மீது பட்டையான கல்லை வைத்து விடுவதை வழக்கமாக கொண்டிருந்தனர்.பின்னாளில், வருங்கால சந்ததியினர், இறந்தோர் நினைவிடங்களை அடையாளம் காண வேண்டும் என்பதற்காக, வசதிக்கேற்ப அடையாளப்படுத்தினர். அப்படி எழுப்பப்பட்டதே, இன்று காணும் ஈமச்சின்னங்கள். இச்சின்னங்கள், பெரும்பாலும் தரிசு நிலக்காடுகளிலேயே அதிகம் காணப்படும்.அதுவே கொஞ்சம் கொஞ்சமாக மாறி, இறந்தவர்களை புதைத்த இடத்தில், கற்களை கொண்டு சிறிய குன்றுபோல் அமைக்கப்பட்டது. இதுவே, கற்குவியல் அல்லது கற்குவை என அழைக்கப்படுகிறது. . இதுபோன்று கற்களை வைத்து ஈமச்சின்னங்களை உருவாக்கிய காலத்தையே பெருங்கற்காலம் என்கிறோம், என்றார்.






மனித வாழ்க்கையில் வேட்டுவ வாழ்க்கையிலிருந்து கால்நடை வளர்ப்பு, வேளாண்மை செய்தல், நகர எழுச்சி ஆகியவை ஒன்றன் பின் ஒன்றாக உருவாகிய தன்மையை மானிடவியல் கண்டு காட்டியுள்ளது. மானிடவியலில் தந்த முடிவுகள், தமிழகத்து வணிக நகர வளர்ச்சியையும், வணிக மையங்களையும் கண்டறிய உதவுகின்றன. அவ்வளர்ச்சி பற்றிய ஆய்வு மேற்கொள்ளப் பெறுகின்றது.

தமிழகம் உலக வாணிக வரைபடத்தில் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றிருந்தது. கீழ்த்திசை நாடுகளுக்கும், மேல்திசை நாடுகளுக்குமிடையில் எளிதாகத் தொடர்பு கொள்வதற்குரிய இடத்தில் தமிழகம் அமைந்துள்ளது. பல்வேறு நாடுகளுக்கும் சென்று வந்த கடல்பெருவழிகள் தமிழகத்தைத் தொட்டுச் சென்றன. அதனால் கி.மு.இரண்டாம் நூற்றாண்டிலிருந்து தமிழகத்தில் வாணிக மையங்களும், நகரங்களும் உருவாயின. தமிழகத்துக் கடற்கரையோரங்களில் இருந்ததாகக் கூறப்பெறும் நகரங்களில் நறவு, மாந்தை, வஞ்சி, முசிறி ஆகிய வாணிகப் பட்டினங்கள் மேற்குக் கடற்கரையில் நிலைபெற்றிருந்தன. கிழக்குக் கடற்கரையில் கொற்கை, அழகன்குளம், புகார், அரிக்கமேடு, சோபட்டினம், மாவிலங்கை, வசவசமுத்திரம், மாமல்லை, மயிலை முதலிய நகரங்கள் நிலைபெற்றிருந்த தன்மை பற்றி பல்வேறு சான்றுகளால் அறிய முடிகிறது.

மேற்குக்கடற்கரைப் பட்டினங்களையும், ஊர்களையும் பற்றி முதலில் ஆய்வு செய்வது வாணிக நகர வரலாற்றினை வரிசைப்படுத்திக் கொள்ள உதவும் தமிழகத்திற்கும் மேற்றிசை நாடுகளுக்குமிடையில் கி.மு.ஆயிரத்துக்கு முன்பின் காலங்களில் வாணிகத் தொடர்பு தோன்றியது. உரோமானியர்களின் வாணிகத் தொடர்பு ஏற்பட்ட பின்பே, கீழ்த்திசை நாடுகளுக்கும் தென்னிந்தியாவிற்குமிடையில் வாணிகத் தொடர்பு தோன்றிற்று.

**பழந்தமிழகத்தின் கிழக்குக் கடற்கரை நகரங்கள்**

கிழக்குக் கடற்கரை நகரங்கள் பற்றிச் சங்க இலக்கியங்களிலும், காவியங்களிலும், தாலமி குறிப்புகளிலும் செய்திகள் கிடைக்கின்றன. பெரிப்ளூஸ் என்ற நூல் கிழக்குக் கடற்கரை நகரங்கள் பற்றி விரிவாகக் கூறவில்லை. கொற்கை,

அழகன்குளம், மருங்கூர்பட்டினம், புகார், புதுக்கே (புதுச்சேரி) சோபட்டினம், மாவிலங்கை, வசவசமுத்திரம், மாமல்லை, நீர்ப்பெயற்று முதலிய கடற்கரைப் பட்டினங்கள் இருந்துள்ளன. அவற்றில் அழகன்குளம், கொற்கை, புகார், புதுக்கே, வசவசமுத்திரம் முதலியவை அகழாய்வு செய்யப்பெற்றுள்ளன. அவ்வூர்களில் கொற்கை, அழகன்குளம் ஆகிய ஊர்கள் கி.மு.7-5ம் நூற்றாண்டிலிருந்து வாழ்விடமாக இருந்துள்ளன. அவ்விரு ஊர்களிலும் வடபுலத்துக் கருப்புவண்ண ஓடுகள் கிடைத்துள்ளன. கிழக்குக் கடற்கரையில் யவன வாணிகம் கி.பி.முதல் நூற்றாண்டிலிருந்து விரிவடைந்தது. அதனால் கீழ்க்கடற்கரை ஊர்கள் நாள்தோறும் புதுவருவாயினைப் பெற்றுவந்த நகரங்களாக வளர்ச்சியடைந்தன.

**அழகன்குளம்**

இராமநாதபுரம் மாவட்டத்துக் கடற்கரையில் அமைந்துள்ள சிற்றூர் ஆகும். சங்க காலத்தில் பன்னாட்டு வாணிகர்கள் வந்து தங்கிச் செல்லும் இடமாக அவ்வூர் விளங்கியது. அங்கு நடைபெற்ற அகழ்வில் பல அரிய தொல்லியல் சான்றுகள் கிடைத்துள்ளன. யவனப் பானை ஓடுகள் அதிக அளவில் அகழ்ந்தெடுக்கப் பெற்றுள்ளன. திச் 10 அன் (திசன்) என்று எழுதப்பெற்றுள்ள ஓடு ஒன்றும் உரோமானியக்காசுகளும் கிடைத்துள்ளன.

கி.மு. நான்காம் நூற்றாண்டிலிருந்து தொழில் வளம் கொழித்த பட்டினமாக அழகன்குளம் எழுச்சிபெற்றது. அங்கு இரும்பு உருக்கி எடுத்ததற்கான சான்றுகள் கிடைத்துள்ளன. ஊதுலைகள், இரும்பைக் காய்ச்சி ஊற்றிய குழாய்கள், உருக்கியெறித்த கழிகற்கள் முதலியவை அதிக எண்ணிக்கையில் கிடைத்துள்ளன. அழகு மணிக்கற்கள் அதிகம் கிடைத்துள்ளன. நீலகிரியிலிருந்து இளஞ்சிவப்பு நீலக்கல், அழகன்குளத்திற்குக் கொண்டு வரப்பெற்று அழகு மணிக்கற்களாக்கப்பெற்று வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பெற்றன. மேலும் கார்னீலியன் மணிக்கற்களும் கண்டறியப்பெற்றுள்ளன. உரோமானிய நாட்டிலிருந்து கொண்டுவரப்பெற்ற கண்ணாடிக் குவளைத்துண்டும் கண்டெடுக்கப் பெற்றுள்ளது. வடநாட்டிலிருந்து கொண்டு வரப்பெற்ற வடபுலக்கருப்புவண்ண ஓடுகள் சில கிடைத்துள்ளன. அவை கி.மு.5 ஆம் நூற்றாண்டுக்கு முன் செய்யப்பெற்றவை. அவை காலத்தினால் முற்பட்ட பாள நிலையில் கிடைத்துள்ளன. அழகன்குளம் கி.பி.4ஆம் நூற்றாண்டு வரை வாணிக மையமாக நிலைபெற்றிருந்தது.

வாணிக மையமாக மட்டுமின்றி கைவினைப் பொருட்கள் உற்பத்தி செய்யும் இடமாகவும் அழகன்குளம் விளங்கியதற்குத் தொல்லியல் சான்றுகள் கிடைத்துள்ளன. அவற்றுள் திசன் என்ற பானை ஓட்டுப்பொறிப்பு குறிப்பிடத்தக்கது. 'திசன் என்ற பெயர் ஈழத்துப் பிராமிக் கல்வெட்டுகளில் மிகுதியும் பயின்று வருகின்றது'1. மேலும் ஈழத்துப் பிராமி எழுத்துக்கள் சில அழகன்குளம் பானை ஓட்டுப் பொறிப்புகளில் கலந்து உள்ளன. இச்சான்றுகளால் அழகன்குளம் ஈழத்துடன் கொண்டிருந்த தொடர்பு உறுதி பெறுகின்றது. அழகன்குளம் ஈழத்திற்கு அருகிலேயே இருப்பதும் அத்தொடர்பிற்குக் காரணமாகலாம்.

**கொற்கை**

கொற்கை சங்க இலக்கியத்தில் பல்வேறு வகையில் குறிப்பிடப் பெறுகின்றது. அவ்வூர், முத்துக்குளிக்கும் பகுதியாகவும், துறைமுகப்பட்டினமாகவும், வாணிகமையமாகவும், பாண்டியர்களின் தலைநகரமாகவும் விளங்கியது. 'கொற்கை முத்து பற்றியும், சங்கு மூழ்கி எடுத்தது பற்றியும் சங்க இலக்கியத்தில் பேசப்பெறுகின்றது' 2.

கொற்கை கி.மு.7 ஆம் நூற்றாண்டிலிருந்து மக்கள் வாழ்விடமாக உருவாயிற்று. அங்கு நடைபெற்ற அகழ்வில் கிடைத்த சான்றுகள் அவ்வூரின் வரலாறு கி.மு.7 ஆம் நூற்றாண்டில் தொடங்குவதாகத் தெரிவிக்கின்றது. அங்குக் கிடைத்த சான்றுகளில் கருப்பு சிவப்புப் பானை ஓடுகளில் தமிழ்ப்பிராமி எழுத்துக்கள் பொறிக்கப்பெற்றிருந்தன. இவ்வெழுத்துக்கள் கி.மு. இரண்டாம் நூற்றாண்டுக்குரியவை. காவிய காலத்திலும் கொற்கை பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன.

கொற்கையில் சங்ககாலப் பாண்டியர் காசுகள் அதிகமாகக் கிடைத்துள்ளன. அக்காசுகள் கொற்கையின் வாணிக வளத்தினை உறுதிப்படுத்துகின்றன. பெரிப்ளூஸ் என்ற நூலிலும், தாலமி நூலிலும் கொற்கை 'கொல்கி' என்று அழைக்கப்பெறுகின்றது. அந்நூல்களில் கொற்கையில் முத்துக்குளித்தது பற்றியும், சங்கு எடுத்தது பற்றியும் சான்றுகள் கிடைத்துள்ளன. அக்கடல்படு பொருட்கள் கொற்கை வாணிக நகரமாக உருவாகக் காரணமாயின. மேலும் கொற்கை பண்டைய நாளில் கடல் வாணிகப் பெருவழிகள் சந்திக்குமிடத்தில் அமைந்திருந்ததும் அதன் வளர்ச்சிக்குக்



காரணமாயிற்று எனக் கூற முடிகிறது.

தொண்டி

மேற்குக் கடற்கரையில் ஒரு தொண்டி நிலைபெற்றிருந்தது போலவே பாண்டிய நாட்டிலும் ஒரு தொண்டி விளங்கியது. அவ்வூர் பற்றி வெளிநாட்டார் குறிப்புகளில் செய்தி கிடைக்கவில்லை. மேல்கூரைத் தொண்டியைப் பாடிய அம்மூவனார் கீழ்க்கரைத் தொண்டியைப் பற்றியும் பாடியுள்ளார்.

> '............................................ கொண்டலொடு
> குருஉத் திரைப்புணரி யுடைதரும் பரதவர்
> மோட்டுமணல் அடைகரைக் கோட்டுமீன் கொண்டி
> மணங்கமழ் பாக்கத்துப் பகுக்கும்
> வளங்கெழு தொண்டி'3

தொண்டித் துறைமுகம் பற்றி சிலப்பதிகாரத்திலும் பேசப்படுகிறது. கடல் கடந்த நாடுகளிலிருந்து அகிற்கட்டை, சந்தனக்கட்டை, பட்டுத்துணி, சாதிக்காய், இலவங்கம், குங்குமப்பூ, கற்பூரம் முதரலன வாசனைப் பொருட்கள் ஏற்றி வந்த கப்பல்கள் தொண்டித் துறைமுகத்திற்கு வந்தன. அப்பொருட்கள் தொண்டியில் இறக்குமதி செய்யப்பெற்று மதுரைக்குக் கொண்டு வரப்பெற்றன. அண்மையில் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, தொண்டியில் அகழாய்வு செய்ததில் தொண்டி சங்ககாலத்து ஊர் என்பதை உறுதிப்படுத்துகின்றது. அகழாய்வில் சங்கு வளையல்கள் மற்றும் பல கருப்பு - சிவப்பு ஓடுகள் கண்டெடுக்கப்பெற்றன.

**சாலியூர்**

மதுரை காஞ்சியில் 'நெல்லின் ஊர்'4 என்றொரு கடற்கரைப்பட்டினம் கூறப்பெறுகின்றது. இதற்கு நச்சினார்க்கினியர் 'சாலியூர்' என்று பொருள் கொண்டுள்ளார். தாலமி பாண்டிய நாட்டுக் கடற்கரையில் 'சாலூர்' என்றொரு கடற்கரைப் பட்டினம் இருந்ததாகக் குறிப்பிட்டுள்ளார். அப்பெயர் சாலியூர் என்ற பெயரின் திரிபு. சாலி என்பது சிறந்த நெல் வகை என்று கருதப்படுகிறது. பல்வகை சாலிநெல் பற்றி புத்த சமய நூல்கள் விளக்கமாகக் குறிப்பிட்டுள்ளன. பௌத்தர்கள் வந்தபின் அந்த நெல்வகை தமிழ்நாட்டிற்கு அறிமுகப்படுத்தப்பட்டிருக்கலாம். அவ்வூரில் சாலிநெல் மிகுதியும் விளைந்தமையால் சாலியூர் என்றும், நெல்லின் ஊர் என்றும் பெயர் பெற்றிருக்க வேண்டும்.

தாலமி குறிப்புகளிலிருந்து சாலியூருக்கும், புகார்ப்பட்டினத்திற்குமிடையில் அர்கரு என்றொரு ஊர் இருந்ததாகவும் அது நெசவுத் தொழிலுக்குப் பெயர் பெற்றது என்றும் அறிகிறோம். அவ்வூர் உறையூர் என்று சிலர் கூறியுள்ளனர். அண்மையில் கே.எஸ்.வைத்யநாதன் என்பார் அவ்வூர் பாண்டிய நாட்டுக் கடற்கரையிலிருந்த ஓர் ஊராகும் என்று கூறியுள்ளார். தற்போது நடைபெற்றுவரும் அகழ்வுச் சான்றுகளைக் கொண்டு அழகன்குளமே 'அர்கரு' என்று தாலமி கூறும் ஊர் ஆகலாம் என்று கூறப்பட்டிருக்கிறது.

சாலியூரே மருங்கூர்ப்பட்டினம்

சங்க இலக்கியத்தில் மருங்கூர்ப் பட்டினம் என்றொரு கடற்கரைப் பட்டினம் கூறப்பெறுகின்றது. ஊனூர் என்னும் ஊரைத்தாண்டி, மருங்கூர்ப் பட்டினம் செல்ல வேண்டும் என்பதை 'ஊனூர் உம்பர்'5 என்னும் அகப்பாடலில் கூறப்பெறுகின்றது. அகப்பாடலில் கூறப்பெறும் 'நெல்லின் ஊர்'6 என்பதோடு ஒப்பிடத்தக்கதாய் உள்ளது.

பாண்டிய நாட்டிற்கும் சோழ நாட்டிற்குமிடையில் பறம்புநாடு, ஒல்லையூர் கூற்றம், பிடவூர் ஆகிய பகுதிகள் இருந்தன. அப்பகுதிகள் வாணிக வகையிலும் போக்குவரத்து வகையிலும் புவியியல் சிறப்பு வாய்ந்ததாக அமைந்திருந்தன.

தொகுப்புரை

தமிழகத்தில் வாணிக மையங்கள், நகரங்கள் ஆகியவை கி.மு.முதல் நூற்றாண்டில் உருவாகத் தொடங்கின. மேலைக்கீழை நாட்டு வாணிகத்தால் கடற்கரைப்பட்டினங்கள் உருவாகின. கி.மு.முதல் நூற்றாண்டிலிருந்து கி.பி.4 ஆம் நூற்றாண்டு வரை கடற்கரைப்பட்டினங்களின் எண்ணிக்கை அதிகமாகிக் கொண்டே சென்றன.

சில கடற்கரைப் பட்டினங்கள் பல்வேறு மொழி பேசும் மக்கள் கலந்து வாழும் பெருநகரங்களாக எழுச்சி பெற்றன. உள்நாட்டுப் பகுதியில் வாணிகப்பெருவழியினால் நகரங்கள் உருவாகின. அவற்றில் காஞ்சி, கருவூர், மதுரை, உறையூர் ஆகியவை பெருநகரங்களாக எழுச்சி பெற்றன.

முனைவர்.ஜோ.பிரின்ஸ், உதவிப் பேராசிரியர்,
அமெரிக்கன் கல்லூரி;, மதுரை

அடிக்குறிப்புகள்

1. Parana vitana. Inscriptions of Ceylon, Vol.1. Nos.114, 240,832,950.
2. அகம், செ.350, வரி,10-13.
3. அகம்.10:8-12
4. மதுரைக், வரி.87-88.
5. அகம், செ.227, வரி. 18-20.
6. மதுரைக், வரி. 87-88.

# இந்திய கிராமங்கள் ஊரும் - சேரியுமாக ஆன வரலாறு

## டேவிட் லிவிங்ஸ்டன்



இந்தியா முழுவதும் உள்ள கிராமங்கள் ஊரும் சேரியுமாக இருக்கிறது. அதாவது சிலர் கிராமத்திற்கு உள்ளேயும், சிலர் கிராமத்திற்கு வெளியேயும் வசித்துவருகிறார்கள். இது ஏன், எப்படி, எப்போது நடந்தேறியது? ஆரம்பத்தில் எல்லோரும் ஒற்றுமையாக இருந்து பிறகு சிலர்மீது தீண்டாமை விதிக்கப்பட்டு கட்டாயமாக வெளியேற்றப்பட்டார்களா? அல்லது ஆரம்பத்திலிருந்தே - தீண்டாமை தோற்றம் பெறுவதற்கு முன்பே - அவர்கள் தனித் தனியாகத்தான் வசித்துவருகிறார்களா?

இத்தகைய கேள்விகளுக்கு அல்லது வரலாற்று போக்கினை பற்றி மானுடவியல், வரலாறு ஆகிய பாடங்களை பயின்று தேர்ச்சிபெற்ற டாக்டர் அம்பேத்கர் அவர்களின் ஆய்வின் முடிவு என்ன சொல்கிறது என்பது பற்றி மிகச்சுருக்கமாக பார்ப்போம்.

**ஊரும் - சேரியும்**

ஆரம்பத்தில் எல்லோரும் ஒன்றாக இருந்து பிறகு தீண்டாமை விதித்து சிலரை கிராமத்திற்கு வெளியே தள்ளப்பட்டதாக நினைப்போமானால் அது தவறு. தொடக்கத்திலிருந்தே அவர்கள் தனித்தனியாகத்தான் வசித்துவருகிறார்கள். இது எப்படி என்றால் உலகெங்கும் பூர்வீக சமுதாயம் (*Primitive Society*) நவீன சமுதாயமாக (*Modern Society*) மாறியபோது இம்மாற்றம் நிகழ்ந்தது.

பூர்வீக சமுதாயமும் நவீன சமுதாயமும் இரண்டு அம்சங்களில் வேறுபடுகிறது. ஒன்று, பூர்வீக சமுதாயமானது இரத்த உறவு கொண்ட குலமரபு சமூகங்களை கொண்டது. நவீன சமுதாயமானது பிரதேச பற்றுதலுடையது. இரண்டாவது, பூர்வீக சமுதாயம் நாடோடி சமூகங்களை கொண்டது. நவீன சமுதாயம் குடியமர்ந்த சமூகங்களை கொண்டது.

பூர்வீக சமுதாயம் நாடோடி வாழ்க்கையிலிருந்து குடியமர்ந்த நிலையான வாழ்க்கைக்கு மாறியபோது இதர நானோடி குழுக்களால் இவர்களுக்கு அச்சுறுத்தல் இருந்தது. எல்லா குலங்களுமே ஒரே சமயத்தில் குடியமர்ந்த வாழ்க்கைக்கு மாறவில்லை சில குலங்கள் தொடர்ந்து நாடோடிவாழ்கையையே பின்பற்றின. ஒரு நாடோடி குழு இதர நாடோடிகளோடு போராடுவதைவிட குடியமர்ந்த குழுக்களை தாக்கி அவர்களின் உணவு தானியங்கள், கால்நடைகளை அபகரிப்பது என்பது எளிமையாகவும், அனுகூலமாகவும் இருந்தது. நாடோடி குழுக்களின் அச்சுறுத்தலை சமாளிக்கமுடியாத இத்தகைய வரலாறுகள் நாம் அறிந்தவையே.

ஆரம்பகாலத்தில் நாடோடி வாழ்க்கையை வாழ்ந்துகொண்டிருந்த எல்லா குலமரபுக் குழுவினரும் தங்களுக்குள் ஓயாது போரிட்டுக்கொள்வது வழக்கம். கால்நடைகளை திருடியது, பெண்களை கடத்திச்சென்றது

போன்ற காரணங்களுக்காக. இப்படி நடக்கும் குலப்போர்களில் எந்த குலமும் பூண்டோடு அழிந்துபோய்விடுவதில்லை. தோற்கடிக்கப்பட்டவர்கள் துண்டு துண்டுகளாக சிதறுண்டு போய்விடுவார்கள். இப்படி சிதறடிக்கப்பட்டவர்கள் மற்ற குழுவுடன் சேர்ந்து அங்கமாக முடியாது. தனிநபர்களாகவே வாழவேண்டியிருந்தது. ஏனென்றால் பூர்வீக சமுதாயம் ரத்த உறவுடைய குலமரபு அமைப்பை அடிப்படையாக கொண்டிருந்தது. இதன் விளைவாக ஆரம்ப காலத்தில் சிதறுண்டவர்கள் (*Broken Men*) அடங்கிய ஒரு பிரிவு எல்லா திசைகளிலும் சுற்றித்திரிந்தனர்.

சிதறுண்ட பிரிவினருக்கு உணவு, இருப்பிடம் போன்ற தேவைகள் மற்றும் மற்றவர்களின் தாக்குதலுக்குள்ளாகும் அபாயமும் இருந்தது. அவர்களால் தனித்துவாழ்வது கடினம். இதேபோல் குடியமர்ந்த சமுதாயத்திற்கும் நாடோடி சமுதாயத்தால் திடீர் தாக்குதலுக்குள்ளாகும் பிரச்சனை இருந்தது.

இப்படி பூர்வீக சமுதாயம் நவீன சமுதாயமாக மாறிய நிகழ்வில் குடியமர்ந்த சமுதாயமும் சிதறுண்ட பிரிவினரும் இவர்களுக்குண்டான பிரச்சனைகளுக்கு முடிவுகட்ட இரு குழுக்களும் ஒரு ஒப்பந்தம் செய்துகொண்டது. குடியமர்ந்த குலத்திற்கு காவல் பணிபுரிய சிதறுண்ட பிரிவினர் ஒப்புக்கொண்டனர். இதற்கு பிரதியாக இவர்களுக்கு உணவும், புகலிடமும் அளிக்க குடியமர்ந்த குலத்தினர் இணக்கம் தெரிவித்தனர். இந்த ஒப்பந்தத்தின் பேரில் குடியமர்ந்த குலத்தினரின் கிராமத்தின் எல்லையில் சிதறுண்டவர்கள் வசிக்கநேர்ந்தது. இப்படித்தான் இந்திய கிராமங்கள் ஊரும் - சேரியுமாக ஆனது.

இது இந்தியாவில் மட்டுமே நடந்த ஒன்றல்ல. அயர்லாந்து, வேல்ஸ் போன்ற இடங்களிலும் குடியமர்ந்த குழுக்களின் கிராமத்துக்கு வெளியே சிதறுண்டவர்கள் வசித்திருக்கிறார்கள். இந்தியாவில் என்ன காரணத்திற்காக வெளியே வசித்தார்களோ அதே காரணத்திற்காக. பிறகு தனிக்குடியிருப்புகள் மறைந்து இரண்டற கலந்துவிட்டார்கள். இது அனைத்து சமுதாயங்களிலும் காணப்பட்ட ஒரு பொது அம்சம். இதிலிருந்து என்னத் தெரிகிறதென்றால் அவர்கள் தீண்டப்படாதவர்கள் என்ற காரணத்திற்காக கிராமத்தைவிட்டு வலுக்கட்டாயமாக வெளியேற்றப்படவில்லை. அவர்களுக்கும் கிராமவாசிகளுக்கும் இருந்த ஒரே வேறுபாடு அவர்கள் வெவ்வேறு குழுவை சேர்ந்தவர்களாக இருந்தனர் என்பதே.

**இன்னும் நீடித்திருப்பதற்கான காரணம்?**

இந்தியாவில் மட்டும் இந்தவேறுபாடு இன்னும் மறையாமல் போனதற்கான காரணம் என்னவென்றால் பிற்காலத்தில் ஏற்பட்ட தீண்டாமை எனும் கருத்துதான். இந்த தீண்டாமையின் தோற்றுவாயாக இருப்பது இன வேறுபாடோ, தொழில் வேறுபாடோ அல்ல. இன அடிப்படையில் தீண்டாமை கடைபிடிக்கப்படுகிறதென்றால் விஞ்ஞானப்படி அது முரண்பாடானது. அதேபோல் தொழில் அடிப்படையில் பார்த்தால் பிராமணர்களும், சத்ரியர்களும், வைஷியர்களும் அசுத்தமான பணிகளிலேயே அசுத்தமான தோட்டி பணியை செய்துவந்திருக்கிறார்கள் எனும்போது அருவருப்பான பணிகள் செய்வது தீண்டாமைக்கு காரணமல்ல. இந்து படைப்பு சித்தாந்தமான வர்ணமுறைப்படி பார்த்தால்கூட சூத்திரர்கள்தான் கடைசியாக இருக்கிறார்கள். ஐந்தாவது வர்ணம் என்ற ஒன்று இருக்கவில்லை. கிராமத்திற்கு வெளியே வசிப்பவர்கள் அவ்-வர்ணமுறைக்கு அப்பாற்பட்டவர்கள் - அவர்ணர்கள். மேலும் மனுவின் காலத்தில் தீண்டாமை இல்லை ஆனால் தூய்மையின்மை இருந்தது.

பிறகு வேறென்ன அடிப்படை காரணமென்றால் அது மாட்டிறைச்சி உண்பதுதான். ஆனால் இன்றிருப்பதுபோல அன்று கிராமத்திற்கு வெளியே வசிப்பவர்கள் மட்டுமே மாட்டிறைச்சி உண்பவர்களாக இருக்கவில்லை. எல்லோருமே மாட்டிறைச்சி உண்பவர்களாகவே இருந்திருக்கிறார்கள். குறிப்பாக பிராமணர்கள் பசுக்களையும் விலங்குகளையும் யாகமென்ற பெயரில் வதைசெய்திருக்கிறார்கள். அதன் இறைச்சிகளை உண்டுமிருக்கிறார்கள். அதுமட்டுமல்ல, பிராமணர்களின் வீட்டுக்கு விருந்தாளி யாராவது வந்தால் அவர்களை கௌரவிக்க பசுவை கொன்று விருந்தளிக்கும் வழக்கம் இருந்திருக்கிறது. பௌத்தர்களும் இறைச்சி உண்பவர்களாக இருந்தாலும் யாகத்தின் பெயரால் உயிர்வதை செய்வதை கடுமையாக எதிர்த்துவந்ததால் இயல்பாகவே இவர்களுக்கு பௌத்தபிக்குகளின்பால் பகைமை இருந்தது.

பிறகு பௌத்தமன்னர்களின் வீழ்ச்சிக்கு பிறகு பிராமண மேலாதிக்கம் பெற்ற ஆட்சி தொடங்கியபோது கி.பி ஐந்தாம் நூற்றாண்டில் - இந்துமதத்தின் தீவிர ஆதரவாளர்களான குப்த மன்னர்கள் பசுவதையை பெருங்குற்றமாக; மாபெரும் பாவமாக பிரகடனம் செய்தனர். அதாவது பசுவை கொல்வது ஒரு பிராமணனை கொள்வதற்கு இணையான குற்றம் என்று கி.பி 465 ஐ சேர்ந்த செப்பு சாசனம் சொல்கிறது. இது விந்தையான ஒன்று - பசுக்களை யாகத்துக்காகவும் உணவுக்காகவும்



அதிகளவில் கொல்பவர்கள் குடியமர்ந்த சமூகத்தினரே ஏனெனில் அவர்களிடம் கால்நடை செல்வங்கள் ஏராளமாக இருந்தது. சிதறுண்டவர்களுக்கு அப்படியல்ல. அவ்வப்போது அவர்களின் காவல்பணிக்காக இறந்த பசுக்களை ஊதியமாக பெற்றிருக்கிறார்கள். - பசுவதை செய்து இறைச்சியை விரும்பி உண்டுவந்தவர்கள் திடீரென்று மாறுவது மனுதர்மத்திற்கே எதிராக இருக்கிறது. ஏனென்றால் பசுவதையை மனு ஒரு குற்றமாக கருதவில்லை. அதன் இறைச்சியை உண்பதில் எந்த ஆட்சேபனையும் அவர் தெரிவிக்கவில்லை.

பிராமணர்கள் இறைச்சியை கைவிட்டுவிட்டு சைவத்திற்கு மாறினார்கள். பிராமணரல்லாத இந்துக்கள் மற்ற இறைச்சிவகைகளை உண்டாலும் மாட்டிறைச்சி உண்பதை மட்டும் நிறுத்தினர். ஆனால் சிதறுண்ட பிரிவினர் தொடர்ந்து மாட்டிறைச்சி உண்டுவந்தனர். இது தீண்டாமைக்கு வழிவகுத்துவிட்டது. மாட்டிறைச்சி உண்பது தனி நபரது சம்மந்தப்பட்டதாக - மதச்சார்பற்றதாக இருந்திருந்தால் இந்த அளவு வேறுபாட்டை உண்டுபண்ணியிருக்காது. மாறாக இது மதம் சம்பந்தப்பட்ட ஒன்றாக, புனிதத்தன்மையை மதிக்காமல் செய்யும் அவச்செயலாக கருதப்பட்டது.

புனித பிராணியாக கருதப்பட்ட பசுவின் இறைச்சியை உண்ணக்கூடாது என்று விதிக்கப்பட்டிருந்த தடையாணைகளை மீறியதன் விளைவாகவே தீண்டாமை தோன்றிற்று. மனு காலத்தில் மாட்டிறைச்சி உண்பது பாவமில்லை ஆனால் குப்த மன்னர்களின் காலத்தில் தடையாணை பிறப்பிக்கப்பட்டதால் கி.பி நான்காம் நூற்றாண்டில் தான் தீண்டாமை தோற்றம் பெற்றிருக்கக்கூடும். இதன் காரணமாகவே சமுதாயம் பிளவுபட்டு குடியமர்ந்த சமூகத்தினர் தீண்டத்தக்கவர்களாகவும், சிதறுண்ட மக்கள் தீண்டப்படாத சமூகத்தினராகவும் ஆனார்கள். இன்றளவும் இந்திய கிராமங்கள் ஊரும் - சேரியுமாகவே பிரிந்துகிடக்கிறது.



# கண்டராதித்யர் பள்ளிப்படை

**வைஷ்ணவி**

நாமக்கல் மாவட்டம் கொல்லிமலையில், கருங்கயம், மேல்கலிங்கம் என அழைக்கப்படும் கிராமத்தில் எட்டுக்கை அம்மன் கோவிலுக்கு அருகில் இந்த கருங்கயம் சோழமுடையார் திருக்கோவில் உள்ளது.

கி.பி 950 முதல் 955 வரை சோழ தேசத்தை ஆண்ட கண்டராதித்த சோழனால் கட்டப்பட்ட பள்ளிப்படை கோயில் இது என விளம்பர பலகையில் குறிப்பிடப்பட்டு உள்ளது. இன்று அதன் சிறப்புகளை யாரும் அறியாமல் ஆளரவமின்றி கவனிப்பார் இல்லாமல் அமைதியாக உள்ளது. யாரும் படித்து அறிந்து கொள்ள முடியாத அறிவிப்பு பலகை மட்டும் மிகவும் சிதைந்த நிலையில் உள்ளது.

இவரைப் பற்றி ஒட்டக்கூத்தர், கண்டன் கோவை, கண்டன் அலங்காரம் என்னும் நூல்களைப் பாடியுள்ளார்.

முதற் பராந்தக சோழனுக்குப் பின்னர் அவனது இரண்டாம் புதல்வனும் , முன்னதாகவே இளவரசுப் பட்டம் கட்டப் பெற்ற வனுமாகிய கண்டராதித்த சோழன் கி.பி. 953 - ல் முடிசூட்டப் பெற்றுச் சோழப் பேரரசனானான். இவன் இராசகேசரி என்னும் பட்டம் ஏற்று ஆட்சி நடத்தினார். இவன் ஆட்சிக் காலத்தில் சோழநாடு மாத்திரமே இவனது ஆட்சியில்





இருந்தது. திருமுனைப்பாடி நாடும், தொண்டைநாடும் இவன் தந்தையாகிய முதற்பராந்தகனது ஆட்சியின் இறுதிக்காலத்திலே தக்கோலப் போரில் வெற்றி கொண்ட மூன்றாங் கிருஷ்ணதேவனால் கவர்ந்து கொள்ளப்பட்டன. இவன் தந்தையால் கொள்ளப்பட்ட பாண்டிய நாடும் இவனுக்குத் திறை கொடுக்கும் சிற்றரசாயில்லை .

இவரது கல்வெட்டுகள், பாண்டிய நாட்டில் காணப்படாமையால் அந்நாளில் மன்னனாயிருந்த வீரபாண்டியன் இவன் காலத்தில் சுயேச்சை எய்தித் தனியரசு செலுத்தியிருக்க வேண்டுமென்பது தெளிவாகின்றது.





அப்பாண்டிய நாட்டை மீண்டும் கைப்பற்ற வேண்டும் என்ற எண்ணம் இவனுக்கிருந்ததாகத் தெரிகிறது . எனினும் இவன் ஆட்சிக்காலத்தில் அது கைகூடவில்லை .

இவ்வரசன் காவிரியாற்றிற்கு வடக்கே கண்டராதித்த சதுர் வேதிமங்கலம் என்ற நகர் ஒன்றை ஏற்படுத்தியதாக ஆனைமங்கலச் செப்பேடுகள் கூறுகின்றன ; இப்போது திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் கொள்ளிடப் பேராற்றின் வடகரையில் உள்ள திருமழபாடிக்கு மேற்கில் ஒரு மைல் தூரத்தில் உள்ள கண்டராச் சியம் என வழங்கும் ஒரு சிற்றூரேயாம் . கண்டராதித்தப் பேரேரி, பெரிய ஏரி ஒன்றிருந்ததென்பது தென்னாற்காடு மாவட்டம் உலகபுரத்திலுள்ளதொரு கல்வெட்டாலறியப்படு என்றகிறது.

இவ்வேந்தன் சிறந்த சிவபக்தியும் , மிகுந்த செந்தமிழ்ப் புலமையும் ஒருங்கமையப் பெற்றவனாயிருந்திருக்கிறான் . தில்லையம் பெருமானிடத்தில் அளவற்ற ஈடுபாடுடையவன் . அப் பெருமான் மீது இவன் பாடிய திருப்பதிகம் ஒன்று சைவத்திரு முறைகளில் ஒன்றாகிய ஒன்பதாந் திருமுறையில் ( திருவிசைப்பா திருப்பல்லாண்டு ) சேர்க்கப் பெற்றிருப்பது அறியத் தக்கதாம். அப்பதிகத்தின் இறுதியிலுள்ள திருக்கடைக் காப்புச் செய்யுளில், இவ்வரசன் தன்னைக் கோழி வேந்தன் எனவும் தஞ்சையர் கோன் எனவும் கூறியிருப்பது நினைவிற் கொள்ளுதற்குரியதாம் .

இம்மன்னன் சைவசமயத்தில் இத்துணைப் பற்றுடையவனாயிருப்பினும், பிற சமயக் காழ்ப்புடையோனல்லன் . அவற்றின் வளர்ச்சிக்கானவற்றையும் மனமுவந்து செய்துள்ளான் . இவன் , தான் அமைத்த கண்டராதித்த சதுர்வேதி மங்கலத்தில் கண்டராதித்த விண்ணகரம் என்னும் திருமால் கோயில் ஒன்றினை எடுப்பித்திருந்தான் . மேலும் , தென்னார்க்காடு மாவட்டத்தி லுள்ள பள்ளிச்சந்தல் என்ற ஊரில் , இவன் பெயரால் கண்ட ராதித்தப் பெரும் பள்ளி என்னும் அமண் பள்ளியொன்றை இவன் பெயராலேயே எடுப்பித்துள்ளான். எனவே, இவன் புறச் சமயத்தவரையும் நன்கு மதித்து அவர்பால் பேரன்புடன் ஒழுகியவன் என்பது தெளிவாகிறது. இவ்வரசனுக்கு இருமனைவியர் இருந்தனர் எனக் கல்வெட்டு களால் அறியப்படுகின்றது . அவ்விருவருள் முதல் மனைவியாகிய வீரநாரணி என்பாள் கண்டராதித்த சோழன் முடிசூடி அர செய்துதற்கு முன்னரே இறந்தாள் எனத் தெரிகின்றது .

செம்பியன்மாதேவி என்பாளே இம்மன்னனின் இளையதேவியாவாள் . மழவரையர் மகளார் ஸ்ரீகண்டராதித்தப் பெருமாள் தேவியார் செம்பியன் மாதேவியார் 7 எனவருங் கல்வெட்டுப் பகுதியில் , இவள் ஒரு மழநாட்டுச் சிற்றரசன் மகள் எனத் தெரியவருகின்றது.

கண்டராதித்த சோழனுக்கு மும்முடிச்சோழன் மற்றொரு பெயரும் வழங்கியுள்ளது . சிதம்பரம் தாலுக்காவி லுள்ள உடையார்குடியில் காணப்படும் கல்வெட்டொன்று இவனை மேற்கெழுந்தருளிய தேவர் எனக் குறிக்கின்றது . இத் தொடருக்குரிய பொருள் அறியுமாறில்லை . இம் மன்னன் மேற்றிசையிற் பகைவரொடு போர் நிகழ்த்தி அங்கு இறந்த செய்தியே இவ்வாறு மங்கல வழக்கால் கூறப்பட்டிருத்தல் வேண்டும் என்பது சில அறிஞர்களின் கொள்கையாகும். குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவளவன் 12 எனவும் , குள முற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன் 13 எனவும் , புறநானூற்றிலும் ‘தொண்டைமானாற்றூர்த் துஞ்சின உடையார் , ஆற்றூர்த் துஞ்சின தேவர் ) 1 , ஆனைமேற்றுஞ்சினஉடையார் ,16 “ பொன் மாளிகைத் துஞ்சினதேவர்217 எனக் கல்வெட்டுகளிலும் வரும் தொடர்கள் , எந்தெந்த அரசர்கள் எவ்வெவ்விடத்திற்றுஞ்சினர் என்பதைத் தெளிவாகப் புலப்படுத்துவதாயுள்ளன .

ஆயின் மேற்கெழுந்தருளிய என்ற தொடர் மேற்காட்டிய தொடர்களைப் போல் இறந்த செய்தியைத் தெளிவுபெற உணர்த்தவில்லை . எனவே , இத்தொடருக்கு வேறு பொருள் இருந்திருக்க வேண்டும் . ஒருகால் இவன் சோழநாட்டிற்கு மேற்கிலுள்ள நாடுகட்குத் தல யாத்திரை சென்று திரும்பி வாராமையையோ , அன்றிச் சிவ ஞானியாக விளங்கிய இப்பேரரசன் அரசு துறந்து நகருக்கு மேற் றிசையில் சென்று தங்கியிருந்ததையோ இத் தொடர் குறிப்பதாகலாம் . கருத்துகளும் ஓர் ஊகமாகுமேயன்றி உறுதியானதல்ல .

பங்களூர் மாவட்டத்திலுள்ள கல்வெட்டொன்று இம்மன்னனைச் ‘சிவஞான கண்டராதித்தர் என்று கூறுகிறது. எனவே , இவ்வரசனுக்கும் மைசூர் இராச்சியத்தின் தென் பகுதியிலிருந்த கங்கநாட்டிற்கும் ஏதோ ஒரு தொடர்பு இருந்திருக்கவேண்டுமென் பது தெளிவாகிறது . அக் கல்வெட்டுச் சிதைந்திருப்பதால் இவ் வரசனைப் பற்றிய செய்திகளை அறிதற்கில்லை . எனினும் , இவன் படைத்தலைவன் ஒருவன் அந்நாட்டு மழவூர்க் கோயிலில் கண்டராதித்த விடங்கரையும் உமாமகேசுவரி அன்னையாரையும் எழுந்தருளுவித்து வழிபாட்டிற்கு நிவந்தமும் அளித்துள்ளனன் என்பது அக் கல்வெட்டால் தெளிவாகிறது . சோழ நாட்டிற்கு நெடுந்தொலைவிலுள்ள கங்க நாட்டில் கண்டராதித்த விடங்கரை எழுத்தருளுவிக்கப் பண்ணுதற்கான காரணத்தை இற்றை நாளில் நாமறிய முடியாவிட்டாலும் ஏதேனும் காரணம் இருத்தல் வேண்டும்.

மைசூர் இராச்சியத்திலுள்ள நந்தி என்னுங் கிராமத்தில் உள்ள சிவன் கோயிலில் ஓர் அரசன் படிமம் உள்ளது . அது சோழ மன்னரது படிமம் என்று அங்கு வழங்கப்படுகிறது . அவ் வடிவம் யோகத்தில் அமர்ந்திருக்கும் நிலையில் உள்ளது . இவ்வடிவம் கோனேரிராசபுரத்திலுள்ள கண்டராதித்தசோழன் படிமத்தைப் பெரும்பாலும் ஒத்துள்ளது . எனவே , கண்டராதித்த சோழனை நினைவுகூர்தற் பொருட்டே அச்சிலை வைக்கப்பட்டிருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது . இச் செய்தி நாம் மேலே எடுத்துக் காட்டிய வரலாற்றிற்குச் சான்றாயுள்ளமை புலப்படும் . பக்திச் செல்வமும் , புலமைச் செல்வமும் ஒருங்கமையப் பெற்ற இம்மன்னன் இறைவனைச் சென்று வணங்கிய தலங்கள்


கோனேரி ராஜபுரத்தில் உள்ள செம்பியன் மாதேவியார் எடுப்பித்த கோவிலில், கண்டராதித்தர் சோழர்

தோறும் இறைவன் மீது பற்பல பதிகங்களைப் பாடியிருத்தல் கூடுமாயினும் கோயிற்பதிகம் ஒன்றே நமக்குக் கிடைத்துள்ளது .

கண்டராதித்தனுக்கு - நெடுங்காலம் மகப்பேறு இல்லாதிருந்து இறுதியில் செம்பியன் மாதேவியால் ஒரு தவமைந்தன் பிறந்தான் . அவன் மதுராந்தகன் எனவும் உத்தமசோழன் எனவும் இரு பெயர்களால் அழைக்கப் பெற்றான் .20 அருமை மகன் மிகவும் சிறு குழந்தையாயிருந்ததால் தன் தம்பி அரிஞ்சயனுக்கு இளவரசுப் பட்டம் கட்டி அரசியல் துறையில் பயிற்றுவிக்க வேண்டியது , இவனது நீங்காக் கடமையாயிற்று . எனவே கி.பி. 954 ஆம் ஆண்டில் அரிஞ்சயனுக்கு இளவரசுப் பட்டங்கட்டினான்.

மதுராந்தகனாகிய உத்தமசோழன் மிக்க இளைஞனாயிருந்த போதே கி.பி. 957 - ல் கண்டராதித்தன் இயற்கை எய்தினான். கண்டராதித்த சோழனைப் போன்றே சிவபக்திச் செல்வம் வாய்க்கப் பெற்ற செம்பியன் மாதேவி, சிறு குழந்தையான அருமை மகனைப் பேணி வளர்ப்பதிலும் சிவபெருமானுக்குப் பலவகைத் தொண்டுகள் புரிவதிலும் தம் நெடிய வாழ் நாளைக் கழித்தமை, பல ஊர்களிலுமுள்ள கல்வெட்டுகளால் அறியப்படு கின்றது .

இக்காலத்தில் கோனேரிராசபுரம் என்று வழங்கப்படும் திருநல்லம் என்னும் திருப்பதியில் எழுந்தருளியுள்ள சிவ பெருமானுக்குத் தம் கணவன் பெயராலேயே கண்டராதித்தம் என்ற கற்றளி அமைத்து அதில் கண்டராதித்தன் இறைவனை வழிபடுவது போல் படிமத்தை வைத்திருப்பதும் நினைவிற் கொள்ளத் தக்கதாம் . மேலும் இக்கோயிலில் நாள் வழிபாடும் , பிற விழாக்களும் நடைபெறுதற்கெனச் செம்பியன் மாதேவி நிலம் வழங்கியுள்ளமையும் கல்வெட்டால் அறியப்படுகின்றது .

இராசகேசரி வர்மன் கண்டராதித்தர் இடைக்காலச் சோழ மன்னர்களில் முதலாம் பராந்தகனுக்குப் பின்னர் பட்டஞ் சூட்டிக்கொண்டவர். இவர் பொ.ஊ. 950 தொடக்கம் 955 வரையுமே சோழ நாட்டை ஆண்டார். முதலாம் பராந்தக சோழன் காலத்திலேயே சோழநாட்டின் வடக்கே இராஷ்டிரகூடர்கள் பலமடைந்து இருந்தனர். கண்டராதித்தரின் ஆட்சியின்போது அவர்கள் தஞ்சைக்கு முன்னேறி அதனைத் தாக்கி அழித்தனர்.

சோழர்கள் பலமிழந்திருந்த இச்சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி, அதுவரை சோழருக்குக் கீழ்ப்பட்டுத் திறை செலுத்தி வந்த பாண்டிய நாடும் சோழர் மேலாதிக்கத்தை உதறினர். பலமுறை முயன்றும் சோழநாட்டின் எல்லைகள் குறுகுவதைக் கண்டராதித்தரால் தடுக்க முடியவில்லை.

# மாணவர்கள் மீட்டு மாதனூர் நடுகல்

## ஆர்.எஸ். சரவணன், வேலூர்

போரில் செயற்கரிய செயலில் ஈடுபட்டு வீரமரணம் அடைந்த வர்களை மண்ணில் புதைப்பதுடன் அவர் நினைவாக நடுகல் நடுவது சங்ககாலத்தில் வழக்கம். அவ்வாறு நடப்பட்ட நடுகல்லில் இறந்தவரின் உருவம், பெயர், புகழ் ஆகியவற்றை வடித்து வைப்பதும், அதை நீராட்டி, பூச்சூட்டி, வழிபாடு செய்வது அக்கால மக்களின் வழக்கமாக இருந்திருக்கிறது, என்பதை

"நடைமெலிந் தொழிந்த சேட்படர் கன்றின்
கடைமணி உகுநீர் துடைத்த ஆடவர்
பெயரும் பீடும் எழுதிஅதர்தொறும்
பீலிசூட்டிய பிறங்கு நிலை நடுகல்."

அகநானூறு சங்க கால பாடல் மூலம் அறியலாம்.





*சங்க காலத்தில் நடுகல் எடுக்கும்போது நடக்கும் நிகழ்வுகள் என காட்சி, கால் கோல், நீர்ப்படை, நடுதல், பெரும்படை, வாழ்த்தல் என ஆறு நிகழ்வுகளைச் சங்கப் பாடல் விளக்குகிறது.*

நடுகற்களுக்கு நாள்தோறும் தீபதூபம் காட்டிப் பூசைசெய்யும் வழக்கமும் ஏற்பட்டது. இதனை புறநானூறு, சிலப்பதிகாரம், மலைபடுகடாம் முதலிய நூல்கள் குறிப்பிடுகின்றன. நடுகல்லைச் சுற்றிலும் கல் அடுக்கி அதனைப் பதுக்கை ஆக்குவர். இந்த நடுகற்களுக்கு 'வல்லாண் பதுக்கைக் கடவுள்' என்று பெயர்.

நடுகல்லை நாள் தோறும் வணங்கினால் விருந்தினர் எதிர்ப்படுவர்' என்றும் போரில் கணவனுக்கும் அரசனுக்கும் வெற்றி கிட்டும் என்றும் பெண்களிடையே நம்பிக்கையும் "நடுகற்களைத் தவறாது வணங்கினால் மழை மிகுதியாகப் பெய்யும். மழை பெய்தலால் கொடுங்கானம் வறட்சி நீங்கிக் குளிரும்; மரம்





செடிகள் தளிர்த்துப் பூக்கும்; அதனால் வறட்சிமிக்க இக்கொடிய வழியில் வண்டுகள் மிகுதியும் மொய்க்கும்; வளம் பெருகும்" என்ற நம்பிக்கையும் மக்களிடையே இருந்தது. இதனை

"தொழாதனை கழிதலோம்பு மதி வழாது வண்டு மேம்படூஉ மிவ் வறநிலையாறே" என்ற புறநானூற்றுப் பாடலடிகள் தெளிவுற உணர்த்துகின்றன.



இவ்வாறு ஊர் உருவாக்கத்தின் போது, ஊருக்குள் நுழைந்த புலியை இந்த ஊரைச் சேர்ந்த ஒரு வீரன் போராடி வென்று உயிர்த் துறந்துள்ள தியாகத்தை போற்றும் நினைவாக வைக்கபட்டிருந்தது அந்த நடுகல். அதிலும், மக்கள் வனவிலங்கு இடையேயான போராட்ட நிகழ்வுக்கு ஆதாரமாக இருப்பவை புலிகுத்திப்பட்டான் கல்.

மாதனூரில் அமைந்துள்ள பார்த்திவேந்திரர் கால நடுகல்லின் கீழே புதையல் கிடைக்கும் என மூடத்தனமான நம்பிக்கையுடன் இரண்டு வருடங்கள் முன்பு,வெளி மாநிலத்தை சேர்ந்த நால்வர் நடுகல் கீழே தோண்டி இந்த நடுகல்லை தரையில் சரித்துவிட்டனர். திருடும் போது கையும் களவுமாக கிராம மக்களிடம் சிக்கி.,அடிவாங்கிமறுநாள் எச்சரித்து அனுப்பி வைக்கப்பட்டனர். சரிந்த நிலையில் கிடந்த நடுகல் நாளடைவில் முட்களும்,புதர்களும் அதை மூடிவிட்டது.

சமீபத்தில் முகநூல் வழியாக வேலூர் பேராசிரியர் திரு. ஜெயவேல் நட்பு அறிமுகமாகியது. கைப்பேசி மூலம் அவ்வப்போது உரையாடல் தொடர்ந்தது. அவர் மாணவர்களை நாங்கள் பயணித்த மறைந்திருக்கும் சரித்திரத்தடங்களுக்கு ஓர் இடம் அழைத்துச் செல்லமுடியுமா? என்று கேட்டபோது எங்கள் நினைவுக்கு வந்தது இந்த மாதனூர் நடுகல் தான். அதே ஊரைசேர்ந்த மாணவர்கள் இருந்தால் நலம் என்றேன் அதே ஊரை சேர்ந்த மாணவர்களும் அந்தக் குழுவில்அதிர்ஷ்டவசமாக இருந்தனர்.அந்த மாணவர் மூலம் மாதனூர் ஊர் தலைவரிடம் பேசி அனுமதி பெற்று ஒரு ஞாயிற்றுக்கிழமை விருப்பம் உள்ள மாணவர்களை நடுகல் இடத்துக்கு வழி கூறி வர சொல்லிவிட்டு,திரு. ஜெயவேல்,உடன் நானும் நண்பர் நரசிம்மனும் மாதனூர்க்கு காலை வேளையில் பயணித்தோம்.

நேரம் தவறாமல் ஏழு மாணவர்களும் ஒரு மாணவியும் அங்கே தேவையான கயிறு,கடப்பாரை,





மண்வெட்டி,தண்ணீர்குடம் என சொல்லி வைத்த அனைத்தையும் எடுத்து வந்து தயாராக இருந்தனர்.முதலில் எல்லோரும் அறிமுகப்படுத்திக் கொண்ட பிறகு அங்கே இருந்த மற்ற நடுகற்களை பற்றி சிறிய அறிமுக உரை நிகழ்த்திய பின்னர்,முதலில்அந்த புதர்களை மாணவர்கள் வெட்டி அகற்றி விட்டு,நடுகல்லை சிறிது நகர்த்தி அதுமுன்னர் அமைந்த அதே இடத்தில் மூன்று அடி ஆழ பள்ளம் வெட்டிய பிறகு நடுகல்லை கயிறு கட்டி இழுத்து வந்து,அனைவரும் ஒரே நேரத்தில் கல்லைத் தூக்கி நிறுத்தி வைக்க முயற்சித்தோம். முதல் முயற்சி தோல்வியே!,

பிறகு சற்று குளிர்பானங்கள் அருந்தியபின், சிறிதுநேரம் கழித்து மீண்டும் உற்சாககுரல் எழுப்பியபடி மாணவர்கள்



முயன்று அந்த குழியில் நடுகல்லை நகர்த்தியபடிதூக்கி நிறுத்தி விட்டனர். சுற்றிலும் கற்களை இட்டு, மணலை கைகளாலும், மண்வெட்டியாலும் தள்ளி,நடுகல்லை சுற்றி மணல் மேடாக அமைத்து விட்டோம்.

அதன் பின்னர் நடுகல்லை சங்க கால இலக்கியத்தில் கூறியதை போல் நீராட்டி, காட்டுப்பூக்கள் சூட்டியும், குங்குமம் இடப்பட்டது. ஊர்த்தலைவர் ஒத்துழைப்பும், ஜெயவேல் மற்றும் குடியாத்தம் அரசினர் திருமகள் ஆலைக் கலைக் கல்லூரி இரண்டாம் ஆண்டு மாணவர்கள் உதவியாலும், உழைப்பாலும் இந்த நடுகல் மீண்டும் அதே இடத்தில் மீண்டெழுந்து நின்றது.

நடுகல் அமைவிடம்:
மாவட்டம்: வேலூர்
வட்டம்: ஆம்பூர்
ஊர்: மாதனூர்
மொழி: தமிழ்
ஆண்டு: போ.ஆ.பி.973
மன்னர்: பார்த்திபேந்திரன்
நடுகல் உள்ள பகுதி: மாதனூர் மலையடிவாரம்.

கல்வெட்டு வாசகம்:

1.ஸ்வஸ்தி ஸ்ரீ கோபார்த்தி பேந்தி ராதி
2. பின்மக்கி யாண்டு பதினால ஆ
3. வது படுவூர் கோட்டத்து
4.கீழடைய நாட்டு
5.(று) நாட்டு
6. தொ
7.ட்டா
8.லஞ்
9.சிவி
10.தமு
11.டை
12.யன்
13.அதி
14.காரி
15.கோ
16.தை
17.(சூ) ர
18.ன்ம
19.கன்





*20.மூ*
*21.க்க*
*22.னாக*
*23.இ*
*24.ரு*

கல்வெட்டின் பொருள்:

பார்த்திபேந்திரனின் 14 ஆவது ஆட்சியாண்டில் பழுவூர் கோட்டத்து, கீழடை நாட்டு தொட்டாலஞ் சேரியை, (தொட்டாளம் என்ற பெயருடைய ஊர் இன்றும் மாதனூர் அடுத்து உள்ளது) சேர்ந்த சீவதமமுடை சேவிடையனின் அதிகாரி கோதை சூரன் மகன்,மூக்கன் இறந்ததன் பொருட்டு இந்த நடுகல் எடுக்கப்பட்டுள்ளதாக அறியப்படுகின்றது.

கல்வெட்டின் அமைப்பு:

3 அடி அகலமும் 7அடி உயரமும் கொண்ட இந்த நடுகல்லில் வீரன்உருவம் பெரிய அளவில் புடைப்பு சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளது. தலையின் வலது புறம் கொண்டையிட்டு, வலது கையில் வாளினை வீசுவதுபோல ஏந்தியும்,இடது கையில் வாளின் உறையை தாங்கியுள்ளார்.

இடுப்பில் அரையாடையும் குத்து வாளும், கழுத்தில்மணிமாலையும் உள்ளது,வீரனின் கை கால்களில்

வீரக்கழல்கள் அணி செய்கின்றன. வீரனின் இடது மேல்புறம் வீரமரணம் அடைந்த வீரர் சொர்க்கம் செல்லும் காட்சியும்,இருபுறமும் தேவதைகள் சாமரம் வீசும் காட்சியும் புடைப்புச் சிற்பமாக செதுக்கப்பட்டுள்ளது.

நடுகல்லில் இடம்பெற்ற அப்போதைய ஆட்சி செய்த மன்னர்பார்த்திபேந்திரன், சுந்தரசோழர் காலத்தில் தொண்டை மண்டலத்தை ஆட்சி புரிந்தவர்.இவர் பல்லவகுல தோன்றல் என்பதற்கு நேரடி சான்றுகள் இல்லை.இவருடைய ஆட்சி காலம் **959-960** ல் ஆரம்பம் ஆகியிருக்கலாம்.

வீரபாண்டியனுடன் நடந்த போரில் இவரும்கலந்து கொண்டிருக்க வேண்டும் அதன் காரணமாகவே ஆதித்த கரிகாலனுக்கு உரிய ‘வீர பாண்டியன் தலைக் கொண்ட’ என்ற பட்டப்பெயர் இவரது கல்வெட்டுகளிலும் காணப்படுகிறது. தொண்டை மண்டலத்தின் பல இடங்களில் இவரது பெயரில் கல்வெட்டுகள் காணப்படுகின்றன.

அதிகம் அறியப்படாத இந்த நடுகல்லின் கல்வெட்டை மாவிட்டு படி எடுத்த படத்தை வைத்தே சிரமம் எடுத்து அனைவரும் அறிய படித்து கூறிய நண்பர்கள், பொன் கார்த்திக்கும், ராகவேந்திராவுக்கும், எங்களது நன்றி உரித்தாகுக. உற்சாகமாக தொண்டாற்றிய மாணவர்களுக்கும், ஒருங்கிணைத்து அழைத்து வந்த பேராசிரியர் திரு.ஜெயவேல் அவர்களுக்கு எங்களது நன்றி உரித்தாகுக. நடுகல்லை பார்வையிட்டது மட்டுமின்றி களப்பணியாற்றி, சரித்திர சின்னத்தை மீட்டெடுத்த நிகழ்வும் சேர்ந்தது அந்த மாணவர்களிடையே பெறும் உற்சாகம் நிச்சயம் இந்த களப்பயணம் அளித்திருக்கும்.இவர்கள் உதவி இல்லையேல் எங்கள் இருவரால் மட்டும் இந்த மீட்டெடுப்பு சாத்தியம் இல்லை.



# பருத்தியின் வரலாறு

## Ar. வித்யா லட்சுமி





நம் ஊரில் பல வகையான வாணிபங்கள் நடைபெற்றுக் கொண்டிருந்தாலும் பருத்தி வணிகத்தில் உலக அளவில் இந்தியா பெரும் பங்காற்றுகிறது. உலகின் பல நாடுகளுக்கு இந்திய துறைமுகங்களிலிருந்து, இங்கு உற்பத்தி செய்யப்பட்ட பருத்தி ஏற்றுமதி செய்யப்பட்டிருக்கிறது. இது கடந்த சில ஆண்டுகளாக நடைமுறையில் இல்லை, பல நூறு வருடங்களாக இந்த இடத்தை இந்தியா தக்க வைத்துக் கொண்டிருக்கிறது. இந்தியர்களுக்கு பருத்தி மிக பரிச்சயமான ஒன்றாக இருந்திருக்கிறது, பருத்தியை விளைவிக்கவும், நூற்பு செய்யவும், தறியின் மூலம் நெசவு செய்யவும் இங்கிருந்த மக்கள் அறிந்திருந்தனர்.

இதை குறித்து அறிந்து கொள்ள, இந்திய துணி வர்த்தகத்தை குறித்து ஆராய்ச்சி செய்யும் பெஸ்சி செஸில் அம்மையாருடன் கலந்துரையாடல் செய்தோம்.

பெஸ்சி, அவர்கள் சென்னை பல்கலைக்கழகத்தில் ஆடை வடிவமைப்பு துறையில் முனைவர் பட்டம் பெற்றவர். இவர் சென்னை கலை கல்லூரியின் முன்னாள் மாணவர். தனது 20 வருட அனுபவத்தில் பல்வேறு நிறுவனங்களோடு சேர்ந்து ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கிறார். நம் நாட்டில் அழிந்து வரும் தறி மற்றும் கைகளால் வண்ணம் தீட்டப்பட்ட பருத்தி கலைகளை குறித்த ஆராய்ச்சியில் ஈடுபட்டிருப்பவர். கலாஷேத்ரா போன்ற கலை நிறுவனங்களில் பெரும்பங்காற்று வருகிறார். தேசிய அளவில் இவரின் பணிகள் அங்கீகரிக்கப்பட்டு வருகின்றது. தற்போது காதியின் பயணம் மற்றும் இந்திய நெசவு குறித்து இரண்டு புத்தகங்களை எழுதி வருகிறார். மாமல்லபுரத்தில் அமைக்கப்பட உள்ள "தமிழ்நாட்டின் கைத்தறி மற்றும் கைவினைப் பொருட்களின் அருங்காட்சியக" வடிவமைப்பில் ஆலோசகராக உள்ளார்.

இந்தியாவின் பருத்தி வகையும், அதில் அவர்கள் பயன்படுத்திய அச்சு மற்றும் வண்ணங்கள் உலக அளவில் பிரசித்தி பெற்றவை. ஐரோப்பா மற்றும் அதன் சுற்றுவட்டார நாடுகளில் கம்பளி ஆடைகள் பிரசித்தி என்றாலும், அவர்களுக்கு பருத்திக்கான தேவையும் இருந்தது. அத்தகைய நேர்த்தியான பருத்தி வகை இந்தியாவில் பயிர் செய்யப்பட்டு, உற்பத்தி செய்யப்பட்டிருந்தது. அவர்களின் இந்த புகைப்படத்தில் அவர்களுக்கு தெரிந்த வகையில் செம்மறி ஆடுகளிலிருந்து கம்பளி தயார் படுத்துவதைப் போல பருத்தியும் விளைவிக்கப்படலாம் என்ற கருத்தோவியமாக இதை எடுத்துக் கொள்ள முடிகிறது.



ஆரம்ப காலத்தில் தென்னிந்தியா பருத்தி வணிகம், அறியப்படாத இடமாக இருந்ததாக ஐரோப்பியர்களின் குறிப்புகளில் இருந்து அறிகிறோம். அதன்பிறகு இங்கு பயன்படுத்தப்பட்ட பருத்தி வகைகளின் நேர்த்தியையும், அவர்கள் சாயம் ஏற்றும் முறைகளையும் அறிந்து கொண்டனர். அவர்களின் ஆவணங்களின்படி இந்தியாவில் 700 வகையான பருத்திகளும், வண்ணம் ஏற்றுதலும் இருந்ததாகவும், அதில் 299 மதராஸ் மாகாணத்திலும், 99 தமிழ்நாட்டில் இருந்ததாக அறிய முடிகிறது. சாயம் ஏற்றுதல் இங்கு கிடைத்த இயற்கையான பொருட்களில் உள்ள நிறங்கள் மூலம் உருவாக்கப்பட்டிருக்கின்றது. நம் மக்களிடையே பருத்தியும், நெசவும் எவ்வளவு முக்கியத்துவம் பெற்றிருந்தது என்பதை அறிய காஞ்சிபுரம் கோயில்களில் உள்ள கல்வெட்டுகளில் நெசவு குறித்த நிறைய தரவுகள் இருப்பதை நம்மால் காண முடியும். உலக அளவில் சாயம் ஏற்றப்பட்ட பருத்தி வகைகளில் நாம் முன்னோடிகளாக இருந்ததை பல ஆவணங்கள் குறிப்பிடுகின்றன. பருத்தி விளைவிப்பதும், அதை நெசவு செய்வதும் ஒரு சமூக நிகழ்வாகவே பார்க்கப்பட்டது. வீட்டில் இருந்த அனைவரும் ஒன்று கூடியும், ஒரு குழுவில் இருந்த அனைவரும் ஒன்று கூடியும் இந்த நெசவு தொழில் செய்துள்ளனர்.

ஆங்கிலேயர்கள் இந்தியாவில் இருந்து பருத்தி கொள்முதல் செய்ய ஆரம்பிப்பதற்கு முன் உலகின் பல்வேறு பகுதிகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு கொண்டிருந்த பருத்தி வியாபாரம், அதன் பிறகு மாறுதல் கொண்டது. இங்கு விளையும் பருத்தியை அவர்கள் பயன்பாட்டிற்கு மட்டுமே எடுத்துக் கொள்ள வேண்டும் என்னும் படியான ஒரு நிலை உருவானது. அதன் மூலம் தரகர்கள் அல்லது வியாபாரிகளின் தலையிடும் பெரும்பான்மையாக பருத்தி வணிகத்தில் ஆரம்பமானது. இந்தியாவில் இருந்து பருத்தி இறக்குமதி செய்வதை ஆரம்பத்தில் எதிர்த்தது, அவ்வூர் விவசாயிகளும், நெசவாளர்களும் தான். ஏனென்றால் இது அவர்களின் வாழ்வாதாரத்தை பாதித்தது. தொழில் புரட்சியின் காலத்தில் இயந்திரங்களை பயன்படுத்தி நெசவு நூற்பு செய்யப்பட்டபோது, மூலப் பொருளான பருத்திக்கு மிகுந்த தேவை உண்டானது. அது இங்கிருந்து இங்கிலாந்துக்கு அனுப்பப்பட்டது. பருத்தி நூலாக மாற்றம் செய்து மீண்டும் அது இந்தியாவிற்கு வந்து இங்கு நெசவு செய்யப்பட்டது.

ஆரம்ப காலத்தில் போக்குவரத்து மேம்பாடு அடையாததால், பல்வேறு சிறிய கிராமங்களை ஆங்கிலேயர்களால் நெருங்க முடியவில்லை. 1800 களில் போக்குவரத்தை மேம்படுத்தி இந்தியாவின் மூலை முடுக்குகளில் உள்ள நெசவு செய்யும் கிராமங்களையும் ஆங்கிலேயர்கள் தங்களின் அதிகாரத்தின் கீழ் கொண்டு வந்தனர். அதன் பிறகு இங்கே பருத்தி மில்கள் துவங்கப்பட்டன. இதற்கிடையில் பருத்தி அனைத்தும் இங்கிலாந்துக்கு



கொண்டு செல்லப்பட்டு அங்கிருந்து நூலாக இறக்குமதி செய்யப்பட்டதால் இங்கிருந்த நெசவாளர்களுக்கு நூல் பற்றாக்குறை ஏற்பட்டது. அதேபோலவே அதை இவர்களிடம் கொண்டுவந்து சேர்க்கவும், இவர்கள் நெய்த துணிகளை வாங்கிக் கொள்ளவும் ஒரு இடைத்தரகர் தேவைப்பட்டார். ஒருவேளை அவர் இவர்களோடு தொடர்பில் இல்லை என்றால் இவர்களுக்கு நூல் கிடைக்கவும், நெசவு செய்யப்பட்ட துணிகளை எடுத்துக் கொள்ளவும் யாருமற்ற நிலை ஏற்பட்டது. இங்கிருந்த பாரம்பரிய பருத்தியை விட்டு, அமெரிக்க பருத்தியை பயன்படுத்தினர். பாரம்பரிய பருத்தி நூலின் நீளம் குறைவாக இருந்ததால், இயந்திரங்களின் மூலம் நெசவு செய்யும் போது நிறைய பிரச்சனைகள் ஏற்பட்டது. அதனால் நீளம் அதிகமாக இருந்த அமெரிக்க பருத்தியை பயன்படுத்தினர்.

19ஆம் நூற்றாண்டில் மத்தியில் பருத்தி ஆடைகளில் அச்சேற்றுவதும், வண்ணங்கள் தீட்டுவதும் பெரும்பாலும் நாடு முழுவதும் நடந்து கொண்டிருந்தது. அத்தகைய அச்சுக்களை இன்றும் நாம் அருங்காட்சியகங்களில் காண முடியும். இதைக் குறித்த ஒரு புத்தகமும் வெளியிடப்பட்டுள்ளது அதன் ஆசிரியர் நாடு முழுவதும் திரிந்து ஆயிரம் அச்சு மாதிரிகளை சேகரித்து அதை அருங்காட்சியகத்தில் பாதுகாப்பாக வைத்துள்ளனர். இந்த மாதிரிகள் மரத்தாலும், உலோகத்தாலும் செய்யப்பட்டவையாக இருந்தது. உலோகங்களை பயன்படுத்தி உருவாக்கப்பட்ட அச்சுகள் மெழுகுக்காக செய்யப்பட்டது. துரதிஷ்ட வசமாக இன்று எங்குமே இந்த வண்ணங்களும், இந்த முறைகளும் பின்பற்றப்படுவதில்லை. இதைப் பற்றி யாரும் அறிந்திருக்கவும் இல்லை.

*Craft council of India* ராமநாதபுரம் மற்றும் அதன் சுற்றியுள்ள பகுதிகளிலும் பயன்பாட்டில் உள்ள அச்சு மற்றும் வண்ணங்கள் மூலம் பருத்தி துணிகளை செய்யும் கலையை ஆவணப்படுத்தியுள்ளது. மூங்கில் மூலம் செய்யப்பட்ட பேனாக்களை கொண்டு வரையும் முறையையும், அச்சு மூலம் துணியில் வரையும் முறையையும் " அம்மன் சிலை" என்ற புத்தகத்தின் வழியாக ஆவணப்படுத்தியுள்ளனர். இந்த முறையில் மூங்கிலை கொண்டு வரையப்படும் முறைக்கு " மெழுகு எழுத்து" என்ற பெயர்.

இன்றைய நிலையில் இந்த முறைகளை பற்றி ஆவணப்படுத்தவும், மீட்டெடுக்கவும் எந்த முயற்சியையும் யாரும் எடுக்கவில்லை என்பது நிதர்சனமான உண்மை. இதைப்

பற்றி எந்த ஆராய்ச்சியும் இப்பொழுது நடைபெறவில்லை என்பதும் இதை செய்து கொண்டிருந்த கலைஞர்கள் என்ன ஆனார்கள் என்பதும் மிகுந்த கவலை அளிக்கிறது. வரலாற்றில் நீண்ட நெடிய பயணமான இந்திய பாரம்பரிய பருத்திகள் குறித்து பலரும் அறிய வேண்டும் என்பது அம்மையாரின் ஆவலாக உள்ளது.

உலக பருத்தி தினத்திற்காக கட்டிடக்கலை அறிஞர் திரு சேவியர் பெனிடிக்ட் அவர்களுடன் நடத்திய கலந்துரையாடலில் ஒரு பகுதி. இந்த உலகில் வணிகம் செய்ய தரை வழியாக செல்வது, கடல் வழியாக செல்வது என்ற முறை பல நூறு வருடங்களாக நடைமுறையில் உள்ளது. நாம் தரைவழியாக செல்லும் பொழுது மிருகங்கள் பொருட்களை சுமந்து வர, ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்திற்கு பயணித்தனர். இந்த முறையில் அதிகபட்சமாக 100 டன் பொருட்கள் கொண்டு செல்லலாம் என்ற நிலை இருந்தது. அதுவே நாம் கடல் வழியாக வணிகம் செய்யும் போது கப்பல்களில் பெருமளவு பொருட்களை கொள்முதல் செய்து ஒரு கண்டத்தில் இருந்து இன்னொரு கண்டத்திற்கு பயணிக்க முடியும்.

இந்த கப்பல்களுக்கு எரிபொருளாக பயன்பட்டது, பாய் மரங்கள். வெவ்வேறு கண்டங்கள் இந்த பாய் மரத்திற்கு பல்வேறு விதமான பொருட்களை பயன்படுத்தினர். சீனர்கள் மூங்கிலால் செய்யப்பட்ட துணிகளையும், பட்டுத்துணிகளையும் பயன்படுத்தினர். தற்கால தென்னிந்தியாவை பொருத்தவரை பருத்தியும், பருத்தியோடு சில பொருட்களை கலந்தும் பயன்படுத்தினர். ஐரோப்பிய நாடுகள் லெனின் துணியை பயன்படுத்தினர். 12ஆம் நூற்றாண்டில் ஐரோப்பியர்கள் தரை வழியாக நெடுந்தொலைவு பயணிக்க முடியாது இருந்தபோது, இந்திய கண்டத்தில் கப்பல் மூலமாக எப்படி பல கண்டங்களுக்கு பயணிக்கின்றனர் என அறிந்து கொள்வதில் ஆர்வம் காட்டினர்.

இதை கண்டுபிடித்தது போர்ச்சுகீசியர்களே! அந்த காலகட்டத்தில் துறைமுகங்களை பிடித்தல் என்ற ஒன்று நடைமுறையில் இருந்தது. அதன் மூலமாக பயணங்களை மேற்கொள்ளுதல் என்றும் ஒரு வழி இருந்தது. ஏனென்றால்






லெனின் துணிகள் ஒரு மாதம் வரையே தாக்குப் பிடிக்கக் கூடியவை, அதை சீர் செய்வதற்கு ஒவ்வொரு மாதமும் கப்பலை அருகில் இருக்கும் துறைமுகத்தில் நிறுத்தி பழுது பார்க்க வேண்டியிருந்தது. அதே நேரத்தில் தென்னிந்தியாவில் பயன்படுத்தப்பட்ட பருத்தி எட்டு மாதங்கள் வரை பயன்பாட்டில் இருந்தது. மேலும் இவர்கள் கடல் ஆமைகள், பறவைகள் போன்றவற்றின் துணை கொண்டு பயணித்தனர். அதனால் இவர்களுக்கு கடல்களை கடப்பது எளிதான ஒன்றாக இருந்துள்ளது.

இதன் மூலமாக இவர்கள் அந்த காலகட்டத்திலேயே உலக வர்த்தகத்தில் தடம் பெற்றிருந்தனர். மிளகு ஏலம் போன்ற மசாலா பொருட்களுக்காக இவர்கள் இந்தியாவிற்கு வந்தார்கள் என்று எண்ணுவதை விட கடலில் வணிகம் செய்ய கப்பலுக்கு தேவையான பருத்திக்காக இவர்கள் இந்தியாவை தேடினார்கள் என்று சொல்வதே சரியாக இருக்கும். இவர்கள் இந்த பருத்தி துணியை மிளகு, ஏலம் போன்றவற்றை கொடுத்து பண்டமாற்று முறையில் பெற்றுக் கொண்டனர். பழவேற்காடு, சென்னை போன்ற பகுதிகளில் இந்த வணிகம் நடைபெற்றது. ஜப்பானியர்கள் தங்கத்தை கொடுத்து இந்த பகுதியில் இருந்த பருத்தியை விலைக்கு வாங்கினர்.

மூன்று பாய் மரங்களைக் கொண்ட கப்பலும் தென்னிந்திய வணிகத்திற்கு பெரும் பங்காற்றியது என்று கூறலாம். இங்கிருக்கும் காற்று நிலையும் அதற்கு துணை புரிந்தது. தென்மேற்கு பருவக்காற்று இறக்குமதி செய்வதற்கான காலம் என்றும், வடகிழக்கு பருவக்காற்று ஏற்றுமதி செய்வதற்கான காலம் என்றும் நாம் கொள்ளலாம். இதன் காரணமாகவே பெரும்பாலான ஐரோப்பிய குடியிருப்புகள் தென்கிழக்கு கடற்கரை ஓரங்களில் அமைக்கப்பட்டிருக்கிறது.



நாகப்பட்டினம், சென்னை, பாண்டிச்சேரி, பழவேற்காடு போன்ற பகுதிகளில் இவர்களின் குடியிருப்புகளை நாம் இன்றும் காண முடியும்.

அதைப்போலவே இவர்களின் பொருட்களை சேமித்து வைப்பதற்காக நிறைய கிடங்குகளையும், தொழிற்சாலைகளையும் இந்த பகுதிகளில் கட்டினார்கள். ஐரோப்பாவில் இருந்த பல நாடுகளும் இந்திய துணை கண்டத்தில் தங்களது கம்பெனிகளை திறந்தது. அதிலும் முக்கியமாக பங்கு வர்த்தகம் என சொல்லப்படுகிற முறை முதன் முதலாக ஆம்ஸ்டர்டாமில் 22 பங்குகளுடன் பழவேற்காட்டிற்கு வருவதற்காக உருவாக்கப்பட்டது.

பருத்தி கருப்பு பருத்தி மண்ணில் விளையும். இது அந்தமான் நிக்கோபார் தீவுகளில் உள்ள டேக் டானிக் அடித்தட்டுகளால் உருவாகிறது. இதன் காரணமாக கொல்கத்தாவில் இருந்து தமிழகத்தின் கடற்கரை வரையில் 150 கடல் மணல் கிராமங்கள் உள்ளது. கொரமண்டல் என்பதை கரி மணல் மேடு என புரிந்து கொள்ள வேண்டும். இந்த வணிகத்தின் மூலமாக பல்வேறு நாடுகளுக்கு இங்கிருந்த கலை மற்றும் கட்டிடக்கலை சென்றதோடு அங்கும் பல நாடுகளின் கலாச்சார மாற்றங்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

இதன் பிறகு சுண்ணாம்பு வைத்து கட்டிடங்களை கட்டுவது என்ற முறை பயன்பாட்டிற்கு வந்தது. அதிலும் முக்கியமாக அலையாத்தி காடுகளில் இருந்து மேங்கரோ என செடிகளின் எரிக்கப்பட்டு அந்த வெப்பத்தில் கடல் சிப்பிகள் எரிக்கப்பட்டு அதிலிருந்து கிடைத்த சுண்ணாம்பு கட்டிடங்கள் அமைப்பதற்காக பயன்படுத்தப்பட்டது. இன்றும் இந்த முறை ஆப்ரிக்க நாடுகளில் பயன்பாட்டில் இருக்கிறது. இதைக் கொண்டு செங்கற்களால் ஆன வீடுகளை கட்டிக் கொள்ளும் வழக்கம் உருவாகிறது.

கலம்காரி வகை பருத்தி துணிகளில் கைகளில் மூலமாக வரைந்து வண்ணங்களை பதிப்பது மற்றும் மாதிரி அச்சுக்களை வைத்து வண்ணங்களை உருவாக்குவது என்று இரண்டு முறை 15ம் 16ஆம் நூற்றாண்டு வரை இங்கே இருந்தது. அதன் பிறகு வண்ணங்களை துணியில் ஏற்று அதை நெசவு செய்யும் முறை பின்பற்றப்பட்டது.

இங்கிருந்து ஒவ்வொரு குடும்பமும் அவர்களுக்கென பருத்தி உருவாக்கத்தில் ஒரு பாணியையும் ஒரு வியாபார முறையையும் வைத்திருந்தனர். அதை அவர்கள் வழிவழியாக பின்பற்றினர். 1925 ஆம் ஆண்டு அமெரிக்க காட்டன் நம் நாட்டிற்குள் நுழைந்த பிறகு இந்த முறை மாற்றம் பெற்றது. தற்பொழுது பெரும்பாலும் இந்த முறையை பற்றி யாரும் அறிந்திருக்கவில்லை.



# மரபுக் கட்டுமானம்

## மணிகுமார்



கட்டடக்கலை வல்லுநர் மணிக்குமார் சென்னையில் 5 வருடங்களாக பாரம்பரிய கட்டுமான கட்டிடங்களை அமைக்கும் *DTK* என்ற நிறுவனத்தை நடத்தி வருகின்றார். இளங்கலையை பட்டப்படிப்பினை முகமது சதக் கல்லூரியில் பயின்று, பல்வேறு பாரம்பரிய கட்டுமான கட்டிடங்களை கட்டும் அலுவலகங்களில் பயின்று இத்துறையில் தன்னை மேம்படுத்திக் கொண்டுள்ளார். தற்சார்பு முறையில் களிமண் கொண்டு கட்டிடங்கள் அமைப்பது, சுண்ணாம்பு பயன்படுத்தி கட்டிடங்கள் அமைப்பது போன்றவற்றை இந்த நிறுவனம் செய்கிறது. கட்டுமான இடத்திற்கு அருகில் கிடைக்கும் கட்டுமான பொருட்களைக் கொண்டு வீடுகளை கட்டிக் கொடுக்கிறார்கள். இத்தகைய கட்டுமானங்கள் பெரும் பொருட்செலவை ஏற்படுத்தும் என்ற எண்ணத்தை மாற்றும் வகையில் அதிக பொருட் செலவுஇல்லாமல் இத்தகைய கட்டிடங்களை உருவாக்க முடியும் என அனுபவபூர்வமாக உருவாக்கி தருகிறார்கள். இதனைப் பற்றி அவர் கூறுகையில்.

"முடிந்த அளவிற்கு சிமெண்டின் பயன்பாட்டை எங்களின் கட்டுமானத்தில் தவிர்ப்பதன் மூலமாக கட்டிடத்தின் உட்புறம் குறைந்தது 4 டிகிரி வெப்பநிலை மாற்றம் இருப்பதை உறுதி செய்கிறோம். நாங்கள் பயன்படுத்தும் சுண்ணாம்பு மூலமாக நிகழும் மாற்றம். கட்டுமானங்கள் காலநிலை மாற்றங்களுக்கும் சுழலிகளுக்கும் தகுந்தார் போல வடிவமைக்கப்படுகிறது.

உடல் நலத்தை பேணுவதற்கும் இத்தகைய

கட்டிடங்கள் பெரும் பங்கு வகிக்கின்றன. பெரும்பாலும் நாம் நம் உடல் நிலையை சீராக்குவதற்கான இயற்கையாக விளைவிக்கப்பட்ட காய்கறிகள் பழங்கள் அதைச் சார்ந்து உருவாகும் என்னை உணவுப் பொருட்கள் போன்றவற்றிற்கு மாறி வருகிறோம், அதேபோலவே நம் உடல் நலத்தை பாதுகாக்கும் படியான உடைகளையும் தேர்ந்தெடுத்து அணிகிறோம் அத்தகைய ஒரு மனநிலை நம் வீடுகளுக்கும் மாறி இருப்பது தற்போதைய சூழலில் சூழலில் மிக முக்கியமான முடிவாக பார்க்கப்படுகிறது. ஏனென்றால் நம் வீட்டிற்குள் நல்ல காற்றும் நிறைய சூரிய ஒளியும் சுவாசிக்க கூடிய வகையில் உள்ள சுவர்களும் வெப்பநிலையை சீராக்கும் கட்டுமான பொருட்களும் இத்தகைய பாரம்பரிய வீட்டு கட்டுமானத்தில் பயன்படுத்தப்படுகிறது.

மெட்ராஸ் டைல்ஸ் மேற்கூரை அமைப்பு பெரும்பாலும் தமிழ்நாடு மட்டுமல்லாமல் தென்னிந்தியாவின் பலஇடங்களில்நம்மால்பார்க்கமுடிகிறது. 300-400 ஆண்டுகால வரலாற்றைக் கொண்டுள்ள இந்த அமைப்பு ஆங்கிலேயர் காலத்தில் இங்கு கட்டப்பட்ட பெரும்பான்மையான கட்டிடங்களின் மேற்கூரையாக அமைக்கப்பட்டிருந்தது



தரைத்தளத்திற்கு மேலே மாடிகளோ அல்லது அறைகளோ கட்டப்பட வேண்டிய தேவை இருந்ததால் இத்தகைய சமதள மேற்கூரை அமைத்து பயன்பாட்டில் கொண்டு வந்தனர்.



இத்தகைய மேற்கூறையை எப்படி அமைக்கிறார்கள் என்று பார்க்கலாம் இந்த முழு மேற்குவரையும் தாங்கி நிற்பதற்கு நமக்கு மர சட்டம் தேவைப்படுகிறது. அறையின் அளவு 10லிருந்து 12 அடியாக இருக்கும் படியாகவும் ஒரு மர சட்டத்திற்கும் இன்னொரு மர சட்டத்திற்கும் இடையே 10 இன்ச் இடைவெளி இருப்பதை போலவும் அமைத்துக் கொள்வோம். வேலை அறையின் அளவு 20 அடுக்கு மேல இருந்தால் ஒவ்வொரு பத்து அடிக்கும் மர தூணை அமைத்து அதன் மீது இந்த சட்டத்தை அமைக்கும் பழக்கம் இருக்கிறது. அதைப்போலவே இந்த அமைப்பில் பயன்படுத்தப்படும் சுண்ணாம்பு ஒரு 30 வருடங்களில் இந்த மர சட்டத்தில் துணை இல்லாமலும் மேற்கூரையை தாங்கும் வலிமையை பெறுகிறது அதுவரையில் இந்த மரச்சட்டம் உறுதியாக இருக்க வேண்டிய அவசியம் உள்ளது.

இந்த அமைப்பிற்கு பயன்படுத்தப்படும் செங்கலின் பெயர் அச்சுக்கல். இரண்டு வகையான சுண்ணாம்புகள் பயன்பாட்டில் உள்ளது ஒன்று கல் சுண்ணாம்பு, இன்னொன்னு கிளிஞ்சல் சுண்ணாம்பு. அதிக காரத்தன்மை



கொண்டுள்ளதால், கல் சுண்ணாம்பு இந்த கட்டுமானத்திற்கு பயன்படுத்தப்படுகிறது. நன்கு ஜலித்த ஆற்று மணல் படுத்தப்படும்.

சுண்ணாம்பையும் ஒன்றுக்கு ஒரு பங்கு என்ற அளவிலோ ஒன்றுக்கு இரண்டு பங்கு என்ற அளவிலோ நன்றாக கலந்து ஒரு 15 நாட்களுக்கு அப்படியே வைத்து விடுவோம். 15 நாட்களுக்கு வைக்கும் வசதி இல்லாத போது மாவு அரைக்கும் இயந்திரம் போன்ற கிரைண்டரில் இரண்டையும் கலந்து மாவு பதத்திற்கு வந்ததை மூன்று நாட்கள் அப்படியே வைத்து விட்டு பயன்படுத்தலாம். அதன் பிறகு நம்முடைய அச்சுக்கள் செங்கல்லைக் கொண்டு இந்த சுண்ணாம்பு கலவை வைத்து நாம் அமைத்த மர சட்டத்திற்கு மேலே ஒட்டிக் கொண்டே வர வேண்டும். இதற்கு மேலே இன்னொரு கல்லை பதித்துக் கொண்டே வருவார்கள். அதற்கு மேலே செங்கல் ஜல்லியை சுண்ணாம்புடன் கலந்து கொட்டி சமன் படுத்துவோம். இந்த முறையில் இதற்கு மேல் உள்ள கட்டுமானத்திலிருந்து இறங்கும் எடை சமமாக இந்த தளத்திற்கும் கீழும் இறங்குவதற்கு ஏதுவாக இருக்கும். இத்தனை அடுக்குகளை அமைக்கும் காரணத்தினால் இந்த மேற்கூரை 12 முதல் 15 இன்ச் அளவு வரை இருக்கும். இதன் காரணமாக கட்டிடத்தின் மேற்பரப்பிலிருந்து அறைகளுக்குள் வருகிற வெப்பமானது தடுக்கப்படுகிறது.

இந்த முறையில் பல்வேறு சவால்களை எதிர்கொள்கிறோம் அதில் முக்கியமானது நல்ல தரமான சுண்ணாம்பு தேர்ந்தெடுத்து வாங்குவது, அடுத்தது இந்த முறையை தெரிந்து வைத்திருக்கிற மேஸ்திரிகளும் கட்டுமான தொழிலாளர்களும் குறைவான எண்ணிக்கையில் இருப்பது நாம் பலருக்கு இத்தகைய பயிற்சியை கொடுத்தாலும் எல்லோராலும் சிறந்த முறையில் இதை செய்ய முடியவில்லை. இதே போல இந்த முறையில் கட்டிடம் கட்டி முடிக்க அதிக நாட்கள் தேவைப்படும். பெரும்பாலும் மழைக்காலங்களில் நாங்கள் எந்த வேலையும் செய்ய முடியாது அதை வேலையை அப்படியே நிறுத்தி வைத்து விடுவோம். ஏனென்றால் மழை கட்டிடத்தின் சுவரையும் அல்லது தரைதலத்தையோ பாதிக்கலாம் பயன்படுத்தப்பட்டுள்ள கட்டுமான பொருட்களும் மழையில் பாதிக்க அதிக சாத்தியங்கள் உள்ளது

இத்தகைய கட்டுமானங்களை தொழில்முறையில் எடுக்கும் பொழுது கட்டிடத்தின் உரிமையாளரின் பங்கு தேவைப்படுகிறது கட்டுமானத்திற்கு ஆகும் நேரத்தையும் பொருட்களின் செலவையும் கலைஞர்களின் பங்களிப்பையும் பற்றிய புரிதல் அவசியம் இருவரும் சேர்ந்து பேசி வடிவமைப்பை உருவாக்கும் பொழுது கட்டிடம் சிறப்பாக இருக்கும் ஒருவேளை அவர்களுக்கு இந்த கட்டிடத்தின் உள்ளே எப்படி இருக்கும் என்ற ஒரு கேள்வி வரும் பொழுது இத்தகைய கட்டிட வகைகளில் பல இடங்களில் மாதிரிகளாக பொது இடங்களில் வடிவமைப்புகள் உள்ளன. அவற்றில் சென்று தங்கி அந்த அனுபவத்தை பெறும் பொழுது இந்த கட்டிடங்களை பற்றிய புரிதல் அதிகமாகும். இத்தகைய கட்டிடங்களை நாம் விற்கும் பொழுது அதன் இடம் கட்டுமானத்திற்கு நாம் பயன்படுத்திய பொருட்கள் கட்டிடத்தின் வயதை பொருத்த விலை மாறுதல்கள் உள்ளன. பாண்டிச்சேரியில் எடுத்துக் கொண்டோமானால் அங்கு இத்தகைய பாரம்பரிய கட்டிடங்களுக்கான விலைமதிப்பு நாம் கட்டிய பொழுது இருந்ததை விட அதிகமாகவே கிடைக்கிறது.

முதன்முறையாக நாங்கள் கட்டிடம் கட்டும் பணியை துவங்கிய பொழுது எங்கள் உரிமையாளர் ஏதாவது வித்தியாசமான ஒரு வடிவமைப்பை எனக்கு காண்பியுங்கள் என்று கேட்டார், அப்பொழுது நாங்கள் பாரம்பரிய கட்டிடக்கலை முறையின் ஆரம்பத்தில் இருந்தாலும் அதை சார்ந்த ஒரு வடிவம் அமைப்பை அவருக்கு காண்பித்த அவருக்கு அது பிடித்து இதையே செய்யலாம் என்று எண்ணினார். அதைப்போலவே இந்த கட்டிடத்திற்கு நாங்கள் பயன்படுத்திய கட்டுமான பொருட்களை குறித்து எங்களின்



ஆராய்ச்சியை ஆரம்பித்தோம் ஒவ்வொரு முறை புதிய பொருட்களை உரிமையாளருடன் விவாதிக்கும்பொழுதும் அவர் எங்களை அதிகமாக ஊக்குவித்தார் மேலும் எங்களுக்கு நிறைய ஆலோசனைகளையும் வழங்கினார்

அடுத்த கட்டமாக இதையே எங்கள் அடையாளமாக மாற்றிக் கொள்ளும் பணியில் இதை சார்ந்து பணிபுரியும்



கட்டுமான கலைஞர்களையும் கட்டுமான பொருட்களையும் இத்தகைய வீடுகளையும் சென்று பார்த்து ஆராய்ச்சியில் இறங்கினோம். எங்களின் ஆராய்ச்சியில் நாங்கள் விஷயங்களை ஒவ்வொரு கட்டிடத்திலும் சிறிய முயற்சியாக ஒவ்வொரு இடமாக பயன்படுத்தினோம் அதிலிருந்து நிறைய கற்றலும் மேம்படுத்தலும் நிகழ்ந்தது.

தமிழ்நாடு முழுக்க பயணப்பட்டதில் நாங்கள் அறிந்து கொண்டது நமது வீட்டின் வடிவமைப்பு நிலம் சார்ந்தது அங்கு கிடைக்கும் மண் அந்த தன்மையை கொண்டு வடிவமைப்பை தீர்மானிக்கின்றன. வெளிப் பக்கத்தில் நாங்கள் அதிகமான ஜல்லி மண் சுவரைப் பார்த்தோம் இவற்றில் கற்கள் அதிகமாகவும் மண் குறைவாகவும் இருந்தது. மதுரை சுற்றியுள்ள பகுதிகளில் களிமண் சுவர்களை பார்க்கலாம். இவற்றை அதிகமான உயரத்திற்கு எழுப்ப முடியாது ஆனால் இதன் கனம் அதிகமாக இருக்கும். கூடம் வகைகளிலும் மதுரை போன்ற ஊர்களில் நடுக் கூடங்களும் திருநெல்வேலி போன்ற ஊர்களில் கூடம் ஒரு பக்கத்திலும் அதைச் சுற்றி மற்ற பயன்பாட்டு இடங்களும் இருப்பதைப் போன்று வடிவமைப்பை காண முடிந்தது இந்த ஊர்களில் வடிவமைக்கும் பொழுது ஊரில் எந்த வகையான பழக்கம் இருக்கிறதோ அதையே புதிய கட்டிடத்திலும் நாங்கள் பயன்படுத்த ஆரம்பித்தோம்.

இத்தகைய கட்டிடங்களை பயன்பாட்டில் கொண்டு வருபவர்களுக்கு இதைப் பற்றிய புரிதல் இதன் மேல் ஒரு விருப்பமும் அவசியம் அவர்களுக்கு என்று அவர்களின் வீட்டிற்கு அலுவலகத்திற்கு ஒரு தேவை இருக்கிறது அதைப்பற்றிய ஒரு புரிதல் இருக்கும் அதை ஒரு கட்டுமான



கலைஞருடன் அமர்ந்து விவாதிக்கும் பொழுது அந்த கட்டிடத்தை அந்த எண்ணத்தை மெருகேற்ற முடியும் இப்படியாக ஒரு நல்ல கட்டிடத்தை நம்மால் வடிவமைத்து தர முடியும்

பரம்பரை முறையில் நாங்கள் வீடுகளை வடிவமைக்கும் பொழுது அங்கு இருக்கும் பொருட்களையும் சேர்த்து பயன்பாட்டிற்கு கொண்டுவர முயற்சிக்கிறோம் எடுத்துக்காட்டாக வரவேற்புரையில் ஒரு மர சோபாவிற்கு பதில் கட்டுமானத்தின் போது கல்லிலோ அல்லது மண்ணிலோ அமரும் இருக்கைகளையும் வடிவமைத்து தருகிறோம் அந்த வசதி வரவேற்புரையின் மற்ற இடங்களை நம் தேவைக்கு பயன்படுத்திக் கொள்ள உதவும் அதேபோல சமையலறையில் அம்மி ஆட்டுக்கல் போன்றவற்றை நிரந்தரமாக வைத்துக் கொள்ள ஒரு இடத்தையும் அமைக்கிறோம் இது பிற இடங்களை நமது பயன்பாட்டிற்கு கொண்டுவர உதவியாக இருக்கிறது.

பொதுவாக இந்த வகை கட்டுமானங்கள் நேரத்தையும் அதேபோல பொருட்ச அளவில் சிறிய மாறுதலையும் கொண்டு வந்தாலும் இது நமக்கும் நம் சந்ததிகளுக்கும் நம் வாழ்வும் இந்த உலகிற்கும் நன்மை தருவதாகும் பலவகையான ரசாயனங்களை வீட்டில் சுவர்களிலோ அல்லது பிற இடங்களில் பரவ விடுவதை விட இத்தகைய முறையில் நாம் கட்டும் வீடுகள் பல காலங்கள் இருப்பதோடு நம் ஆரோக்கியத்திலும் பெரும் பங்கு வகிக்கிறது தலிக்காக இத்தகையதொரு கலந்துரையாடலுக்கு நன்றி.

கட்டிடக்கலை நிபுணர் திரு மணி குமார் அவர்களுடன் தளிக்காக ஒரு நேர்காணல்

# அஞ்சல்
## வித்யா லட்சுமி




*1712* ஆம் ஆண்டு கவர்னர் ஹாரிஸ் இன் முதல் முதலில் இந்திய அஞ்சல் சேவையை சென்னையில் துவங்கி வைத்தார். இது சென்னையிலிருந்து வங்காளத்திற்கு குதிரையில் அஞ்சல்களை கொண்டு செல்வதற்காக துவங்கப்பட்டது. இது *1774* ஆம் ஆண்டில் தனியார் அஞ்சல்களை விநியோகிக்க துவங்கியது. சென்னை சென் ஜார்ஜ் கோட்டையில் அஞ்சல் அலுவலகம் துவங்கப்பட்டது. இது அரசாங்கத்தின் செலவில் தபால்களை மக்களிடம் கொண்டு போய் சேர்த்தது. ஆனால் சில காலங்களுக்குப் பிறகு அதற்காக பணம் வசூலிக்கப்பட வேண்டும் என்ற கட்டாயத்திற்கு ஆளானது . ஆர்கி பால்ஸ் சென்னையின் கவர்னராக பணியாற்றிய, காலத்தில் சென்னையில் அதிகமான போர்களோ சண்டைகளோ இல்லை இதனால் அவரால் நகரத்தின் மேம்பாட்டிற்காக நிறைய நேரத்தை செலவிட முடிந்தது .

இங்கு மருத்துவமனைகளையும்,வங்கிகளையும், வியாபாரிகளுக்கான சங்கங்களையும், காவலர்கள் ஒழுங்கு முறையையும், வானியல் ஆய்வுக்கூடத்தையும், ஆதரவற்றோர் இல்லத்தையும் அவர் உருவாக்கினார் . அதன் அடிப்படையில் மெட்ராஸ் அஞ்சல் சேவை துவங்கப்பட்டு, அதன் முதல் தபால் தலைவராக ஆர்க்கி பால்ஸ், அவர்களின் உதவியாளர் ஏ எம் கேம்பில் நியமிக்கப்பட்டார். சிறிது காலத்திற்குள்ளேயே அவரது நியமனம் ரத்தாகி ஆலிவர் கால்ட் அந்த பதவியை ஏற்றுக்கொண்டார்.

மெட்ராஸ் மாகாணத்தில் இருந்த கோட்டை அஞ்சலகம் தபால்களை பெறுவதற்கு என்று இன்னும் இரண்டு அலுவலகங்களை உருவாக்கியது. வெப்பேரியிலும், ராயப்பேட்டையிலும் அவை இயங்கின. *1837* ஆம் ஆண்டு அஞ்சலகம் கோட்டைக்குள் இருந்த பழைய வங்கி அலுவலகத்திற்கு மாற்றப்பட்டது. அதன் பிறகு மவுண்ட் ரோட்டிலும் இன்னும் இரண்டு தகவல்களை பெரும் அலுவலகங்கள் திறக்கப்பட்டது. *1854* ஆம் ஆண்டு தபால் தலைகள் முதன்முதலாக வெளியிடப்பட்டன. அதோடு

அந்த வருடத்தில் தபால் பெட்டிகளும் சென்னையில் அறிமுகப்படுத்தப்பட்டன. தபால் சேவையின் தேவை அதிகரித்ததால், அலுவலகம் கொத்தவாள் சாவடி சந்தைக்கு அருகில் கார்டன் ஹவுஸ் கட்டிடத்திற்கு மாற்றப்பட்டது.

ரயில் துறையின் சேவை வளர்ந்த போது, தபால் துறையும் வளர்ச்சி அடைந்தது. 1874 ஆம் ஆண்டு சென்னையில் 9 அஞ்சல் அலுவலகங்கள் இயங்கின. 1915 ஆம் ஆண்டு சென்னையில் மோட்டார் வாகனங்கள் அறிமுகப்படுத்தப்பட்டிருந்த போதும் 1918 ஆம் ஆண்டு வரையில் குதிரை வண்டிகளிலேயே தபால்கள் கொண்டு செல்லப்பட்டன. 1853 ஆம் ஆண்டில் தந்தி சேவை சென்னையில் அறிமுகப்படுத்தப்பட்டிருந்தாலும், 1855 ஆம் ஆண்டு முதல் அது பொதுமக்களின் சேவைக்காக பயன்பட்டது.

1868 ஆம் ஆண்டு மெட்ராஸ் சேம்பர் ஆஃப் காமஸ்(*Chamber of Commerce*) இந்திய அரசாங்கத்தையும், மெட்ராஸ் அரசாங்கத்தையும் சென்னையில் ஒரு பொது அஞ்சல் அலுவலகம் தேவை என்று கோரிக்கையை முன் வைத்தது. அதே நேரத்தில் கல்கத்தாவிலும், பம்பாயிலும் அரசாங்கம் கட்டிடங்களை கட்டிக் கொண்டிருந்ததால் சென்னையின் தபால் அலுவலகத்திற்கு பெரும் தொகையை அளிக்க முடியாத நிலையில் இருந்தது. இரண்டு லட்சம் ரூபாய்கள் மட்டுமே இந்திய அரசாங்கத்தாலும், மதராச அரசாங்கத்தாலும் தர


*Khejuri Earliest Post office, West Bengal*

MADRAS.
GENERAL POST OFFICE.

முடிந்தது. இன்றைக்கு சென்னையில் உள்ள பொது அஞ்சல் அலுவலகம் இருந்த இடத்தில் வங்கி அலுவலகம் இயங்கி வந்தது. 1880 பணம் இல்லாத காரணத்தினால் கட்டிட வேலை சிறிது மந்தமாகவே நடந்திருந்தது. மேலும் இந்த இடம் மதராஸ் வங்கிக்கும், அஞ்சல் அலுவலகத்திற்கும் பொதுவானதாக கருதப்பட்டு இரண்டு அலுவலகங்களும் பிரித்து பயன்படுத்த வேண்டி இருக்கலாம் என்ற ஒரு கருத்தும் நிலவியது. ஆனால் சேம்பர் ஆஃப் காமர்ஸ் அஞ்சல் அலுவலகத்தில் அஞ்சல் மற்றும் தந்தி துறை இரண்டும் அமைக்கப்பட வேண்டி இருந்ததால், அந்த கட்டிடம் அவர்களுக்கு மட்டுமே பயன்படுத்தப்பட வேண்டும் என்று கூறியது.

புதிய கட்டிடம் 1884 ஆம் ஆண்டு அஞ்சல் அலுவலக பயன்பாட்டிற்கு கொண்டுவரப்பட்டது. இது இந்தோ சாரசினிக் (*Indo-sarasenic*) கலை வடிவமைப்பைச் சார்ந்தது. ராபர்ட் கிஷ்காம் என்ற வடிவமைப்பாளர் இதை வடிவமைத்திருந்தார் . இவர் 1865 ஆம் ஆண்டு சென்னைக்கு வந்து, தொழில் முறை கலைகளின் பள்ளி முதல்வராக நியமிக்கப்பட்டார். அதே நேரத்தில் இங்கிருக்கும் பழைய கட்டிடங்களை சீரமைப்பு செய்வதற்கும், மறு வடிவமைப்பு செய்வதற்கும் துவங்கினார். சென்னை மாநிலக் கல்லூரி இவர் சீரமைத்த கல்லூரி ஆகும். ஆரம்ப காலகட்டத்தில் ரனைசன்ஸ்(*Renaissance* ) மற்றும் காத்திக் (*Gothic*) முறை



கட்டிடக்கலை அமைப்பை பின்பற்றி வடிவமைத்தார். அதன் பிறகு சேப்பாக்கம் அரண்மனை வளாகத்தை வடிவமைக்கும் பொழுது இவர் முதல் முதலில் வேறு கலை அமைப்பு பின்பற்றி இருந்தார். இவர் திருவனந்தபுரத்தில் இருந்த நேப்பியர் மியூசியம், சென்னையின் மாநிலக் கல்லூரி, சென்னை கட்டிடம், மெட்ராஸ் பல்கலைக்கழகம், பி. ஆர். ஆர் சன்ஸ் அவர்களின் அலுவலகங்கள், ஊட்டியின் அஞ்சல் மற்றும் தந்தி அலுவலகங்கள் போன்றவற்றை வடிவமைத்தார். 1872 ஆம் ஆண்டு முதல் 1886 ஆம் ஆண்டு வரை சென்னையின் வடிவமைப்பு ஆலோசகராக இருந்துள்ளார். மெட்ராஸ் கலை கல்லூரியின் குழுவில் இடம்பெற்றிருந்தார்.

இதை நாம் சிவப்பு வண்ணம் பூசிய விக்டோரியன் நாட்டு கலை பணி என்றோ அல்லது விக்டோரியன் காத்திக் கலோனியல் கலை வடிவம் என்றே கூறலாம். இது மூன்று தளங்களைக் கொண்டு 352 அடியும், 162 அடியும், 125 அடி உயர கட்டிடம் 66,000 சதுர அடிகளை கொண்டு இரட்டை கோபுரங்களையும் கொண்டுள்ளது. திருவனந்தபுரம் அரண்மனையை ஒட்டி கேரளத்து மேற்கூரைகளின் அமைப்பை பின்பற்றி திரிசாங் இந்த கட்டிடத்தை வடிவமைத்தார். இந்த கட்டிடத்தில் மேற்கூரைகள் உயர்ந்ததாகவும், நடுவில் முற்றம் வைத்தும், சமையலறை அலுவலர்கள் தங்குவதற்கான இடங்கள் போன்றவையும் வைத்து அமைக்கப்பட்டது. தரைத்தளமும், முதல் தளமும் அலுவலகங்களாக இயங்குகின்றது. இரண்டாம் தளத்தில் மேலாளர்கள் தங்குவதற்கான இடங்கள் அமைக்கப்பட்டுள்ளன. அக்டோபர் 23ஆம் தேதி 2000 ஆண்டில் கட்டிடத்தில் தீ விபத்து ஏற்பட்டது கிட்டத்தட்ட 15,000 சதுர அடிகள் இந்த விபத்தில் பழுதாகியது. 36 மில்லியன் செலவில் இந்த கட்டிடம் 2005 ஆம் ஆண்டு பழுத்துப் பார்க்கப்பட்டு நவம்பர் 26 ஆம் தேதி 2005 ஆம் ஆண்டில் முதல் இரண்டு தளமும் அலுவலக பணிகளுக்காக மீண்டும் திறக்கப்பட்டது.



# தேரைகள்

## சந்துரு மாணிக்கவாசகம்

### (வரலாற்று சிறுகதை பாகம்)

புங்கமரமொன்றை மைய ஆதாரமாகக்கொண்டிருந்த அந்த வட்டவடிவ சிறு குடிசை மிகுதியாகவே நைந்துபோயிருக்க, சூரியக்கதிர்கள் ஏராளமாய் உட்புகுந்திருந்தன. வெயிலிலும் பனியிலும் தொடர் பணியிலிருப்போர் இளைப்பாறுவதற்கென உருவாக்கப்பட்டிருந்த குடிசைகளில் ஒன்றான இதில்தான் வேளூர்க்கூற்றத்து சாத்தன்குடி வெள்ளாளன் இரவி பாளூர் உடையார் கட்டுண்டு கிடந்தான்.

கைகள் இரண்டும் பின்புறமாகக் கட்டப்பட்டு, மண்டியிட்டுக் குனிந்திருந்த அவனது வாலிப்பான உடல் வெகுவாய் சோர்ந்திருந்தது. மயங்கி கீழே சாய்ந்துவிடாவண்ணம் அவனது வயிற்றுக்கும் நெஞ்சுப்பகுதிக்குமிடையே வலுவான கயிறொன்று புங்க மரத்துடன் இணைக்கப்பட்டிருந்தது.

தலையில் இறுகக் கட்டியிருந்த துணி உறுதியிழந்து அவனது கழுத்தின் இருபுறமும் இறங்கி, தோள்களின் வழியே முன்னால் தொங்கிக் கொண்டிருந்தது. வழிந்தோடிக் கொண்டிருந்த வியர்வையை துடைக்க வழியுமில்லாமல், துடைக்கும் நிலையிலும் இல்லாமலிருந்தான் இரவி. வலியின் நிலை அறியாத அவனது கடுக்கண்களோ விண்மீன்களுக்கு இணையாய் கதிர் வீசி மிளிர்ந்துகொண்டிருந்தன.

மாநிலத்தின் வெவ்வேறு பகுதிகளிலிருந்து சிறிதும் பெரிதுமாகக் கொண்டு வரப்பட்டிருந்த ஆயிரக்கணக்கான பாறைகள் இத்தனை காலமும் இந்தப் பகுதியின் பல மைல்கள் தூரத்திற்கு விரவி, குடிசையை சுற்றியிருந்த பகுதிகள் முழுவதையும் மொத்தமாக ஆக்கிரமித்திருந்தன. பெருவுடையார் கோவிலின் பணிகள் ஏறத்தாழ முடிவடையும் கட்டத்தை அடைந்திருந்த நிலையில், அனைத்து பாறைகளும் கோபுரமாகவும் மதில்களாகவும் மாற்றம் பெற்றிருக்க, ஆங்காங்கே சிறிதும் பெரிதுமாக சில பாறைகள் மட்டுமே எச்சம் போல் கிடந்தன.

இறுதிக்கட்டப் பணிகளில் அதிமுக்கியமானதாகக் கருதப்பட்ட கல்வெட்டு பொறிக்கும் பணி தீவிரமாக நடைபெற்றுக்கொண்டிருக்க, அச்சுக்களைப் போன்று எழுத்துகளைப் படைக்கும்திறன் பெற்றிருந்த குதிரைப்படை வீரனான இரவி1 அப்பணியில் முதன்மையானவனாகக் கருதப்பட்டான்.

சுற்றும் முற்றும் பார்த்தபடியே குடிசைக்குள் வேகமாய் வந்து நின்றான் சேந்தன். அவனது கையிலிருந்த நீண்ட மண்குடுவையில்தண்ணீர்ததும்பிக்கொண்டிருந்தது. இரவியின் தாடையை மென்மையாய் நிமிர்த்தி தூக்கிப் பிடித்தவன், "அண்ணா.. அண்ணா.." என்றவாறே முகத்தை இப்படியும் அப்படியுமாக அசைத்தான்.

அரை மயக்கத்திலிருந்த இரவி மெதுவாகக் கண்விழித்து சேந்தனைப் பார்த்தான். 'ம்' என்ற முனகல்

ஒலி மட்டுமே வந்தது.

“அண்ணா.. தைரியமாக இருங்கள். விரைவில் நன்மையே நடக்கும்”
சொல்லிவிட்டு, குழந்தைக்கு தண்ணீர் புகட்டுவதைப் போல் மிகுந்த சிரத்தையுடன் சிறிதுசிறிதாக புகட்டினான். கண்களாலேயே போதும் என்றுணர்த்திய இரவிக்கு நீண்ட இடைவெளிக்குப் பின்னர் பெருமூச்சு வந்தது. பேச முயற்சித்தான்.

“சேந்தா..”
“சொல்லுங்கள் அண்ணா..”

“நான் இப்படி.. இப்படி.. கிடப்பது.. எனது..”

“தங்கள் குடும்பத்தாருக்கு தெரியுமா என வினவுகிறீர்களா அண்ணா..?”

ஆமோதித்து தலையை மேலும் கீழுமாக அசைத்தான் இரவி.
“அண்ணியாரும் குழந்தைகளும் மிகவும் கலங்கிப் போவார்களென்பதால் செய்தியை இன்னும் அங்கு கொண்டுசெல்லவில்லை. இன்னும் சில நாட்களில் நிச்சயமாக விடிவுகாலம் இருக்குமென்று உறுதியாக நம்புகிறேன் அண்ணா. பொறுத்திருப்போம். அதுவரை நீங்கள் தைரியமாக இருங்கள்”
லேசாக தலையசைத்தான்.

சற்றுதூரத்தில் குதிரைக் குழம்பொலிகள் கேட்க, சேந்தனுக்கு பதற்றம் தொற்றிக்கொண்டது. அவசரமாய் இரவியின் காதில் கிசுகிசுத்தான்.

“அண்ணா, மேகநாதன் வருகிறான் என நினைக்கிறேன். உங்களுக்கு உதவியாக நான் நிற்பதைக் கண்டால் தேவையற்ற சிரமங்களை உண்டாக்குவான். பின்னொரு நேரத்தில் வருகிறேன்”

இரவியின் பதிலை எதிர்பாராமல் குடிசையிலிருந்து வேகமாய் வெளியேறியவன், நிராகரிக்கப்பட்டுக் கிடந்த பெரும் பாறைகளுக்குப் பின்னால் மறைந்தவாறே அவ்விடத்தைவிட்டு அகன்றான்.

குதிரையிலிருந்து குதித்து இறங்கிய மேகநாதன் ஆணவ நடைபோட்டு இரவியின் முன்னே வந்து கால் பரப்பி நின்றான்.

“கொடுத்த அவகாசத்தைக் கடந்து முழுதாய் ஒருநாள் முடிந்திருக்கிறது இரவி. என்ன முடிவெடுத்திருக்கிறாய்? எனது உத்தரவுக்கு கட்டுப்படுகிறாயா இல்லையா?”

பதிலின்றி அமைதியாகவே குனிந்திருந்தான். உடன் வந்திருந்த வீரனுக்கு சைகை காட்ட, இரவியின் முகத்தை வெடுக்கென்று மேலே தூக்கி நிறுத்தினான் அவன்.

“உனது இந்த அழுத்தமான நிலை, உனது உயிருக்குதான் உலை வைக்கப்போகிறது. ஒருமுறை மனைவி மக்களை கண்முன்னே நிறுத்திப் பார்த்துக்கொள். அவர்கள் அனாதைகளாய் தெருவில் நின்று உணவுக்குக் கையேந்தும் நிலையை விரைவில் உருவாக்கப் போகிறாய்”

“பரவாயில்லை. அது ஆண்டவன் முடிவாக இருக்கலாம். உங்கள் முடிவல்ல” என்றான் ஈனஸ்வரத்திலேயே. பின்னால் நின்ற வீரர்கள் பக்கம் திரும்பிய மேகநாதன் கோபத்தில் அலறினான்.

“ஆதவா, இவனது பூர்வீகப் பகுதியான சாத்தன்குடிக்குச் சென்று, இவன் விரைவில் உயிர்துறக்கவுள்ள செய்தியை பறை அறிவிக்க ஏற்பாடு செய். இவனது குடும்பத்தாரும் உற்றார் உறவினரும் பதறி ஓடி வரும்வேளையில் இவனது உடல் கயிற்றில் தொங்கவிடப்பட்டு கழுகுக்கு இரையாகிக் கொண்டிருக்கவேண்டும்”

உதட்டோர புன்னகையொன்றை சாதாரணமாக உதிர்த்தான் இரவி. பொங்கிப் பெருகிய கோபத்தை கட்டுப்படுத்த வழி தெரியாமல், முன்னே கிடந்த பெரும் கல் ஒன்றை இரவி மீது பலமாக எத்திவிட்டு வெளியேறினான் மேகநாதன். தாடைப்பகுதியை பதம் பார்த்த அந்தக் கல், குருதியை அருவியாய் பெருகி வரச் செய்தது.

வெளியே வந்த மேகநாதனிடம் பறை அறிவிப்பு உத்தரவை உறுதிசெய்யக் கேட்ட வீரனிடம், “பொறுத்திரு. அவனுக்கான அவகாசம் ஒன்றை வைத்திருக்கிறேன். முடிந்ததும் சொல்கிறேன்” என்றுவிட்டு பரியின் மீதேறி பறந்தான்.

மேகநாதனின் முன்னே புன்னகைத்துவிட்டாலும், அவன் சொன்னதுபோல் மனைவி மக்கள் கண்முன்னே பிரசன்னமானார்கள். ‘எங்கள் எதிர்காலம் என்னவாக இருக்கப்போகிறது? என்னவிதமான கொடுமைகளை நாங்கள் அனுபவிக்கக் காத்திருக்கிறோம்?’ என்ற அவர்களின் கேள்விகளுக்கு இரவியிடம் பதிலின்றி கண்களில் நீர் பெருக்கெடுத்தது. ஆனாலும் மேகநாதனின் உத்தரவுக்குக் கட்டுப்படும் எண்ணம் துளியும் இல்லாமலிருந்தது அவனிடம்.
மேகநாதனுடன் வருகைதந்த வீரர்களுமே இவன் அனுபவிக்கும் சித்திரவதைகளைக் கண்டு பரிதாபம் கொண்டார்கள். ’அப்படி என்னதான் உத்தரவு போட்டுவிட்டான் இந்த மேகநாதன்? அவன் சொல்வதை செய்துவிட்டு பொன்னையும் பொருளையும் பெற்றுக்கொண்டு அமைதியாய் செல்லாமல் எதற்காக



இப்படி வதைபட்டு உயிர்துறக்கவேண்டும்?' - தங்களுக்குள் கேட்டுக்கொண்டார்கள்.

இரவி ஒப்புக்கொள்ளாமல் வதைபடுவதற்கு அவனது மனசாட்சி மட்டுமே காரணமென்பது அவர்களுக்குத் தெரியாமலிருந்தது.
ஆம்.. ஒப்பற்ற ஆட்சி புரிந்துவரும் மாமன்னன் இராஜராஜ சோழன் மீது அன்பும் அளவற்ற மரியாதையும் கொண்டிருக்கும் எந்தவொரு குடிமகனாலும் ஒப்புக்கொள்ளமுடியாத செயல் மேகநாதனுடையது. இராஜராஜனின் புகழுக்கு களங்கம் கற்பிக்கும் வகையிலான பொய்புரட்டுகளை வரலாறாக சித்தரிக்க வற்புறுத்தும் அற்பத்தனமான செயல்.

கல்வெட்டில் பொறிக்கப்படவேண்டிய தகவல்கள் குறித்து அறிஞர் பெருமக்களிடம் இராஜராஜன் ஆலோசித்திருக்க, அவர்களும் அவையனைத்தையும் பட்டியலாக்கி அவனது ஒப்புதல் பெற்று பணியை துவக்கியிருந்தனர். அப்பணியையே இரவியும் சிரமேற்கொண்டிருந்தான். பணியாளர்களை கண்காணிக்க நியமிக்கப்பட்ட இந்த மேகநாதனோ, தான் இயம்புபவற்றையும் இடைச்செருகலாய் கல்வெட்டில் பொறிக்கச் சொல்லி இரவிக்கு வாய்வழியாக உத்தரவிட்டதுதான் அத்தனை துயருக்கும் காரணமாகிப் போயிருந்தது.

“மன்னியுங்கள். மாமன்னரின் புகழ் இவ்வையகம் உள்ளவரை நீடித்திருக்கும் வகையிலேயே இந்தக் கல்வெட்டுகளை உருவாக்கும் புண்ணியம் நிறைந்த பணி என்னிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. ஆனால், தங்களது வாசகங்கள் அனைத்தும் இந்த ஆட்சி பரிபாலனத்திற்கு முற்றிலும் எதிரானவைகளாக இருக்கின்றன. அவரது புகழுக்கு பெரும் களங்கத்தை உண்டாக்கும் வகையில் கற்பனையாக புனையப்பட்டிருக்கின்றன. இவ்வாறான கொடுமையை எனது கரங்கள் நிச்சயமாக செய்யாது” என்றான் இரவி.

“கோவில் நிர்மாணப் பணிக்கென அமர்த்தப்பட்ட தலைமை அதிகாரிகளில் நானும் ஒருவன். எனது உத்தரவை மீறுவது உனக்கு நல்லதல்ல” என்றான் அவன்.

“தங்கள் வாசகங்கள் இங்கு பொறிக்கப்படவேண்டுமானல், அவற்றில் அரச முத்திரை பெற்று வாருங்கள். தங்கள் கட்டளைக்கு கீழ்படிந்து பொறித்துவிட்டுச் செல்கிறேன். அவ்வாறே, தாங்கள் ஒரு அதிகாரி என்பதையும் ஒப்புக்கொள்கிறேன். ஆனால், நான் பணிபுரிகிறேனா அல்லது படுத்து உறங்குகிறேனா என்பதை மட்டுமே தங்களால் கண்காணிக்கமுடியும். எனக்களிக்கப்பட்ட பணியில் தலையிட தங்களுக்கு உரிமை அளிக்கப்படவில்லையென்பதை தாழ்மையுடன் நினைவூட்ட விரும்புகிறேன். இந்த உத்தரவுக்கு அடிபணியாமல் செல்வதன் மூலம் எனக்கு எவ்விதமான

துர்பலனும் ஏற்படப் போவதில்லை" - இரவியின் உறுதியான பேச்சும் முடிவும் மேகநாதனை வெகுவாகக் கொந்தளிக்கச் செய்தது.

"பணியில் தவறு செய்பவர்களையும், அதிகாரிகளின் உத்தரவுகளுக்குக் கீழ்படியாதவர்களையும் தயவுதாட்சண்யமின்றி தண்டிக்கும் உரிமை எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. வருந்தப் போகிறாய் நீ" எனக் கொக்கரித்தான் மேகநாதன்.

"விந்தையாக இருக்கிறது அய்யா. மாமன்னரின் புகழுக்கும் அவரது ஆட்சி அதிகாரத்திற்கும் எதிராக செயல்பட மறுப்பதுதான் நான் செய்யும் குற்றமெனில், என்னை சபையில் நிறுத்துங்கள். எவ்வித தயக்கமுமின்றி தண்டனையை ஏற்கிறேன்" என்றான் இரவி.

"உனக்கெல்லாம் சபை ஒரு கேடா? உன்னை என்ன செய்கிறேன் பார்" என வீறுகொண்டு கிளம்பிச் சென்றவன்தான், வீரர்கள் நால்வரை அனுப்பி இரவியை இந்தக் குடிசைக்குக் கொண்டுவந்து கிடத்தியிருந்தான்.

"உனது மனம் என்றைக்கு மாற்றம் பெறுகிறதோ அன்றைக்குதான் உனக்கு விடுதலையும் அரசுப் பணியும். ஒரு நாளைக்கு ஒரு வேளை உணவும், ஒரு முறை மட்டுமே தண்ணீரும் வழங்க உத்தரவிட்டிருக்கிறேன். உயிர் ஒட்டிக்கொண்டிருக்கும் வரையே உனக்கான அவகாசம். இங்கு அனாதையாகக் கிடந்து உயிர்விடும் முன் நல்லதொரு முடிவிற்கு வருவதுதான் நல்லது" என கர்ஜித்துவிட்டுச் சென்றிருந்தான்.

நாட்கள் இப்படியே கடந்திருக்க, உடல் வலுவிழந்து நோயாளியாக உருமாறத்துவங்கியிருந்தான் இரவி. அவனது நிலையைக் கண்ட சேந்தனோ வெகுவாகக் கலங்கினான். இயலாமை அவனை வாட்டியது.

"சேந்தா, நான் இல்லத்திற்கு திரும்பாதது குறித்து எனது மனைவி மக்கள் உன்னிடம் விசாரித்திருப்பார்களே? அவர்களை எப்படி எதிர்கொள்கிறாய்?"

"ஆம் அண்ணா. அண்ணியார் தினமும் விசாரித்தபடியேதான் உள்ளார்கள். குழந்தைகள் ஏங்குவதைக் காணவும் மனம் வலிக்கிறது. பணிச்சுமை காரணமாக தொடர்ந்து பணியாற்றிக் கொண்டிருப்பதால் வர இயலவில்லை என ஒருவாறாகக் கூறி சமாளித்துக் கொண்டிருக்கிறேன்"

மிடறு விழுங்கி கண்கலங்கினான் இரவி.

"அண்ணா.. மேகநாதன் எதிர்பார்ப்பதை செய்துவிட்டுத்தான் போங்களேன். அதற்கான பலனையும் பாவத்தையும் அவனே அனுபவித்துவிட்டுப் போகட்டும். உங்கள் உயிருக்கு ஆபத்து நெருங்கிக் கொண்டிருக்கிறது அண்ணா. தயவுசெய்து உங்களைச் சுற்றியிருக்கும் அன்பானவர்களைப் பற்றியும் சிந்தியுங்கள்"

"இதில் சிந்திப்பதற்கு எதுவுமில்லை சேந்தா.. ஒரு அரசின் நிர்வாகம் சரியாக இருக்குமானால் ஆவணங்களும் சரியாகவே இருக்கவேண்டும். அதற்கு நமது மாமன்னரே மிகச் சிறந்த உதாரணம். கட்டுமான வேலைகள் துவங்கி, ஒவ்வொரு நாள் நடவடிக்கைகளையும் கல்வெட்டில் பதித்துவிடவேண்டுமென்கிற கவனம் நம் மன்னரிடம் மிக அதிகமாகவே இருந்துவருகிறது2. விபரங்களனைத்தையும் அத்தனை அழகாக ஆவணப்படுத்திக் கொண்டிருக்கிறார். தான் வழங்கிய பொன் பொருளைக் கொண்டு மட்டுமே இத்திருக்கோவில் உருவானது என எவரும் கற்பனை செய்துவிடாவண்ணம், 'நாம் கொடுத்தனவும், நம் அக்கன் கொடுத்தனவும், நம் பெண்டுகள் கொடுத்தனவும், கொடுப்பார் கொடுத்தனவும் இந்தக் கல்லிலே வெட்டி அருள்க2' என பாகுபாடின்றி அனைவரின் பெயரையும் பொறிக்கப் பணித்திருக்கிறார் மன்னர்"

"இத்தனை சிறப்புமிக்க நம் மாமன்னருக்கு எதிராக செயல்படும் இந்த மேகநாதனின் துரோகச்செயலுக்கு எப்படி என்னை துணை போகச் சொல்கிறாய்? அவனுக்கு ஒத்துழைக்காத காரணத்திற்காக என் உயிர் போவதைப் பற்றி கிஞ்சித்தும் நான் வருந்தவில்லை. இப்பொழுது இல்லையென்றாலும் என்றோ ஒருநாள் இவ்வுடலைவிட்டு நான் நீங்கத்தான் போகிறேன். ஆனால், அந்த மரணம் உறுத்தல் இல்லாத ஒரு பயணமாக இருக்கவேண்டும். குடும்பத்தைப் பற்றிய கவலை என்னை ஆட்கொண்டிருப்பதென்னவோ உண்மைதான். என்றாலும், மாமன்னரைக் காப்பது போலவே நான் வணங்கும் பெருவுடையார் எனது மனைவி மக்களையும் நிச்சயமாக நலமுடன் பார்த்துக்கொள்வான் சேந்தா. நீயும் தேவையின்றி உடலையும் மனதையும் வருத்திக்கொள்ளாதே"

சேந்தனின் மனம் அவனது வார்த்தைகளை உள்வாங்க மறுத்தது.

"கொடுங்கோல் ஆட்சிபுரிந்த எத்தனையோ மன்னர்களை நம் மக்கள் கண்டிருக்கிறார்கள். ஆனால், எண்ணற்ற போர்களில் வெற்றி வாகைசூடியிருக்கும் நமது மாமன்னர் எந்தவொரு கொடுமையையும் மனித இனத்திற்குச் செய்ததாய் அறிந்ததில்லை3. தங்களை தவறிழைக்க வற்புறுத்திக்கொண்டிருக்கும் மேகநாதனின் இந்தச் கொடுஞ்செயலை மாமன்னருக்கோ தலைமை அதிகாரிகளின் பார்வைக்கோ கொண்டு செல்ல எனக்கு அனுமதி கொடுங்கள் அண்ணா. இல்லையேல், அவனது எண்ணங்களுக்கு முட்டுக்கட்டை போட்டிருக்கும் தங்களை குற்றவாளியாக உருவகித்து தண்டித்துவிட்டு, இந்தக் காரியத்தை வேறொருவனை வைத்து சாதித்துக்கொள்வான் அவன். தங்களது போராட்டம் வீணாகவே முடியும்"

சோர்வான நிலையிலும் மனம்விட்டுச் சிரித்தான் இரவி.

“இதுபோன்ற மனிதர்களை காலம் அப்படியெல்லாம் எளிதாக விட்டுவிடாது சேந்தா. அவன் நினைப்பவற்றையெல்லாம் செயல்படுத்திவிட முடியாது. மாமன்னரைப் பற்றி நீ அறியாததா? பொறுத்திருந்து பார்”

“எவரது பார்வையிலும் பட்டுவிடாதவகையில், ஆள் நடமாட்டமில்லாத பகுதியில் தங்களை தனிமைச்சிறையில் வைத்திருக்கிறான். எந்த முயற்சியும் மேற்கொள்ளாமல் உங்கள் நிலை எப்படி மாமன்னரின் பார்வைக்குச் செல்லும்? உங்கள் நிலையை எடுத்தியம்பி அவனை தண்டிப்பதே சரியான வழியாக இருக்கும் அண்ணா”

“நல்லெண்ணம் படைத்த எளிய மனிதர்களைச் சுற்றியே எக்காலமும் துரோகிகள் சூழ்ந்திருக்கும் நிலையில், செல்லுமிடமெல்லாம் வெற்றிவாகை சூடிவரும் நம் மாமன்னருக்கு எத்தனை எத்தனை துரோகிகள் உடன் வலம்வந்துகொண்டிருப்பார்கள் என்பதை எண்ணிப் பார். மன்னரின் பார்வைக்கு செய்தியைக் கொண்டு செல்லும் உனது முயற்சி இவ்வாறான துரோகிகளால் ஏதோவொரு இடத்தில் தோல்வியை சந்தித்துவிட்டால், உனக்கான தண்டனையும் மிகப்பெரியதாகவே இருக்கும் சேந்தா. என்னோடு சேர்ந்து நீயும் பாதிக்கப்படுவதில் எள்ளளவும் எனக்கு உடன்பாடில்லை. மேகநாதனின் செயல்கள் இப்படியே தொடரட்டும். பொறுமையாக இருந்து காலத்தின் வழி செல்வோம்”

இரவியின் நேர்மைக்கு எதிராக மேலும் வாதம் செய்ய மனம் இடம் தரவில்லை சேந்தனுக்கு. அவனருகே மண்டியிட்டு அமைதியாக அமர்ந்திருந்தான்.
“சேந்தா.. ஒரே ஒரு உதவி செய். மேகநாதனிடம் அனுமதி பெற்று, எனது குடும்பத்தை மட்டும் ஒருமுறை அழைத்து வந்து என்னிடம் காட்டிவிடு”

“அண்ணா..”

“ஆம் சேந்தா.. ஒருவேளை அவனது திட்டப்படி எனக்கு ஏதேனும் நிகழ்ந்துவிட்டால்? சற்றும் எதிர்பாராமல் எனது உயிரற்ற உடலை பார்க்கும் நிலை அவர்களுக்கு வந்துவிடக்கூடாது. ஏகத்திற்கும் உடைந்து போவார்கள். நான் இல்லாதநிலையில் என் மனைவி செய்யவேண்டிய காரியங்கள் குறித்தும் அவளிடம் எடுத்துரைக்க வேண்டியிருக்கிறது..”
என்ன பதில் சொல்வதெனத் தெரியாமல் மெதுவாக தலையசைத்துக் கொண்டான் சேந்தன்.

பலமாக சிரித்தான் மேகநாதன்.

“குடும்பத்தினர் வந்து பார்க்கவேண்டுமா? எதற்காக அவனது குடும்பம் மட்டும் பார்க்கவேண்டும்? இன்னும் சில தினங்களில் ஒட்டுமொத்த ஊருக்கே பறை அறிவித்து விடலாம், இரவியின் உடலைப் பார்க்க விரும்பும் எவரும் தாராளமாக வந்து பார்த்துச் செல்லலாம் என்று”

“அய்யா.. நான் அனுமதி வேண்டுவது, இரவியின் குடும்பத்தார் அவரை உயிருடன் பார்க்கவேண்டுமென்பதற்காக. தங்களது பேச்சு மிகுந்த மன வருத்தத்தை உண்டாக்குகிறது”

“ஓ.. மனம் வலிக்கிறதோ? அப்படியானால் நீயே அவனிடம் பேசி நான் கொடுத்த பணியை செவ்வனே நிறைவேற்றச் சொல்லலாமே..?!”

சிறிதுநேரம் அமைதியாக நின்ற சேந்தன், மெதுவாக மேகநாதனை ஏறிட்டான்.

“இத்திருக்கோவிலை நம் மன்னர் ஒரு ஆன்மீகத்தலமாக மட்டுமல்லாமல் சோழப் பேரரசின் தலைமைச் செயலகமாகவே உருவாக்கி வருகிறார். இக்கால ஆட்சி முறை, கொடை விபரங்கள், வரி தொடர்பான தகவல்கள் என அனைத்தும் கல்வெட்டுகளில் பொறிக்கப்பட்டு வருவதை தாங்களும் அறிவீர்கள். நமது தமிழ்ப் பண்பாட்டையும் கலைத் திறமையையும் நாட்டு மக்களனைவரும் அறிந்துகொள்ளவும், மற்ற மொழிக் கலாச்சாரம் நமது எல்லைக்குள் ஊடுருவி கேடு நிகழ்த்திவிடாவண்ணம் தடுப்பதிலும் இந்தப் பெருவுடையார் கோவில் முதன்மையான செயலகமாகவே விளங்கவிருக்கிறது.

வருங்கால சந்ததியினரும் சோழ சாம்ராஜ்யம் தொடர்பான அனைத்து தகவல்களையும் இத்திருக்கோவிலின் வாயிலாகவே அறிந்துகொள்ளவிருக்கிறார்கள்2. இப்பேர்ப்பட்ட புண்ணிய கேந்திரத்தில் உண்மைக்கு புறம்பான தகவல்கள் பலவற்றையும் வரலாறு என்ற பெயரில் தாங்கள் பொறிக்கச் சொன்னால் இரவியின் மனம் எப்படி அய்யா இடம்கொடுக்கும்?”

“முடிந்ததா உனது பிரசங்கம்? தலைமை அதிகாரிகளில் ஒருவனாக வலம் வரும் எனக்கு இக்கோவிலைப் பற்றி வகுப்பு எடுக்கிறாயா நீ? இரவிக்கு நான் கொடுத்த பணியும் அவகாசமும் அவனது உயிரோடு சம்பந்தப்பட்டிருக்கிறது. நீ இடையே வந்து அவனுக்காக வாதாட முயற்சித்தாலோ, ஏற்கனவே நான் எச்சரித்துள்ளபடி இரவியின் நிலையை வேறு எவரிடமும் தெரியப்படுத்த முயற்சி செய்தாலோ அவனுக்கு முன்பாகவே உனது உயிர் பறிபோகும், மனதில் கொள்”
சேந்தன் வெறுப்பான பார்வை ஒன்றை வீசிவிட்டு அவ்விடத்தைவிட்டு அகன்றான். ’இத்தனை வன்மமும் துரோக சிந்தனையும் நிறைந்த ஒருவன் நிச்சயமாக இந்த மண்ணைச் சார்ந்தவனாக இருக்கமுடியாது. மாமன்னரின் பார்வையில் படாமல் கண்காணிப்பு அதிகாரியாக வேறு வலம்வந்துகொண்டிருக்கிறான்’

பேராபத்தில் சிக்கிக்கொண்டிருக்கும் இரவியை காப்பாற்றுவதற்கான வாய்ப்புகள் குறித்து தீவிரமாக சிந்திக்கத் துவங்கியிருந்த அதேவேளை, தண்டனையை நிறைவேற்ற பெரும் முனைப்பிலிருக்கும் மேகநாதன் அறிவிப்பானை வெளியிட தயாராகிவிட்டிருக்கும் செய்தியும் அவனை வந்தடைந்திருந்தது.

விடியற்காலை.

சேந்தனின் வீட்டுக் கதவு பலமாகத் தட்டப்பட, அதிர்ந்து எழுந்தாள் சேந்தனின் மனைவி நெடுங்குழலி. உடல் அசந்து ஆழ்நிலை உறக்கத்திலிருந்த கணவன் எழுந்துவிடாமலிருக்க பதற்றம் கொண்டாள். மென்மையாய் அடியெடுத்து வைத்து, மீண்டும் தட்டப்படுவதற்குள் அவசரமாய் வாசற்கதவையடைந்து தாழினை நீக்கினாள்.

வாசலில் நின்றிருந்தாள் இரவியின் மனைவி இளநாச்சி.

"வாருங்கள் அக்கா. என்ன இத்தனை காலையில்?" லேசான பதற்றத்துடனே வரவேற்றாள்.

இளநாச்சியின் முகம் கலவரம் நிறைந்ததாயிருந்தது. இம்மியளவும் புன்னகைக்க முடியாத நிலையிலிருந்தாள் அவள். என்னவென்று புரியாமல் சிந்தனையுடனே ஆறுதலாய் கரம்பிடித்து அழைத்து வந்து ஊஞ்சலில் அமர வைத்தாள் நெடுங்குழலி.

"சற்று பொறுங்கள். நொடியில் பால் கறந்து வருகிறேன்"

"இல்லையம்மா. எதுவும் வேண்டாம். கொடிய கனா ஒன்று கண்டு மனம் பொறுக்காமல் பதறி வந்திருக்கிறேன். தம்பி சேந்தனை கொஞ்சம் எழுப்பி விடுகிறாயா?"

இளநாச்சியின் நிலைகண்டு வருந்தியவளுக்கு சேந்தனின் அசதி குறித்த கவலை காணாமல் போனது. அவசரமாய் சென்று

அவனை எழுப்பினாள்.

இளநாச்சியின் வருகை பற்றி சேந்தனின் காதில் சொல்ல, அரண்டு எழுந்தான் அவன். 'அய்யோ! தகவல் அண்ணியார் வரை வந்துவிட்டதா? எப்படி சாத்தியம் இது?'

மொத்த உறக்கமும் கலைந்து, இளநாச்சியின் முன்னால் வந்து நின்றான்.

"வாருங்கள் அண்ணியாரே. இந்த நேரத்தில் உங்களை சற்றும் எதிர்பார்க்கவில்லை. ஏதேனும் அவசர தகவல் உண்டா?"

"சேந்தா.. நேற்றைய பகல்வேளையில் வீட்டு வாசலில் கோட்டான்கள் கூவியபொழுதே மனம் வெகுவாகப் பதறியது. இருப்பில்லாமல் தவித்தேன். மீண்டும் இன்றைய அதிகாலைப்பொழுதில் மிகவும் கொடுமையான கனா ஒன்றைக் கண்டேன். மனம் பொறுக்கவில்லை. அவரைப் பார்த்தே ஆகவேண்டும் சேந்தா. சில வார்த்தைகளாவது பேசிடவேண்டும். எப்படியேனும் அவரை வரவழைக்கிறாயா?"
கலங்கி நின்றான் சேந்தன்.

"உடனடியாக வரவழைப்பது எந்த அளவிற்கு சாத்தியம் என்பது தெரியவில்லை. ஆனால் உங்கள் ஆவலை நிச்சயமாக அவரிடம் தெரியப்படுத்துகிறேன் அண்ணியாரே. கவலை வேண்டாம். அண்ணன் நலமாகவே உள்ளார். விரைந்து வரச் சொல்கிறேன். மனதைக் குழப்பிக்கொள்ளாதீர்கள்"

"ஒருவேளை அவரது வருகை தாமதமாகுமெனில், இன்றைய தினம் நானே அவரது பணியிடத்திற்கு வந்து ஒருமுறை பார்த்துவிட்டு திரும்புகிறேன். அதுவே எனக்கு நிம்மதியைக் கொடுக்கும் சேந்தா. அவரைப் பார்த்துவிட மனம் துடிக்கிறது"
"இல்லை அண்ணியாரே. அது.. அண்ணன் ஒரே இடத்தில் பணியில் இருப்பதில்லை. தினம் தினம் பணியிடம் மாறியபடியே உள்ளது. ஆயிரக்கணக்கான பணியாளர்களுக்கு நடுவே அவர் எங்கு, எவ்வாறான பணியிலிருக்கிறார் என்பதைக் கண்டறிவது அத்தனை சுலபமில்லை"

"எப்படியிருப்பினும் பெருவுடையார் கோவிலில்தானே பணியிலிருக்கிறார்? எத்தனை நாழிகையானாலும் காத்திருந்து பார்த்துவிடுகிறேனே"

"இல்லை. இதில் சாத்தியம் மிகக்குறைவு. நான்.. நான் இன்றைய பொழுதுக்குள் எப்படியும் அண்ணனை சந்தித்துவிடுவேன். நிச்சயமாக அவரிடம் தகவலை கொண்டு சேர்க்கிறேன். நீங்கள் குழந்தைகளுடன் மகிழ்ந்திருங்கள் அண்ணியாரே.."

– தடுமாறியபடியே சமாளித்து அனுப்பி வைத்தான்.

மேகநாதனின் உத்தரவுப்படி சாத்தன்குடிக்கு வந்து சேர்ந்திருந்தான் பறை அறிவிப்போன். அவனது வருகையை எதிர்பார்த்திருந்த சேந்தன், ஊர் எல்லையிலேயே அதிகாலை முதல் காத்திருந்தான். ஊரார் எவர் கண்ணிலும் பறையறிவிப்போன் பட்டுவிடும் முன்பாகவே அவனைப் பார்த்துவிடும் எண்ணத்திலேயே அத்தனை சீக்கிரம் வந்திருந்தான்.

"உனது பெயர் அறியலாமா?" – சேந்தன்.

“விருமன்”

“ஈசன் மரபில் வந்தவனே.. நானும் மேகநாதனுக்குக் கீழ் பணிபுரிபவன்தான். உனது உதவி வேண்டியே அர்த்தசாமம் முதல் இங்கு வந்து காத்திருக்கிறேன்”

“இப்படி காத்திருக்குமளவிற்கு என்னவிதமான உதவியை எதிர்பார்க்கிறீர்கள் என்னிடமிருந்து?”

“உனது கரங்களிலிருக்கும் இரவியின் தண்டனை குறித்த செய்தியை ஊர்ச்சபையின் ஒப்புதல் பெற்றபின்னர்தானே பறையறிவிப்பாய்?”

“ஆம். வழக்கமான நடைமுறைதானே?”

“நல்லது. ஊர்ச்சபையினரிடம் கொடுக்கப்படவுள்ள அந்த ஓலையை நான் சற்று படித்துப் பார்க்கலாமா?”

தயங்கி நின்றான் விருமன்.

“இவ்வாறான பழக்கம் இதுவரை என்னிடம் இருந்ததில்லை. இந்தச் செயலால் எந்த பாதிப்பு வந்தாலும் அதனை நானே எதிர்கொள்ளவேண்டியிருக்கும்”

“கவலைகொள்ளாதே விருமா. நிச்சயமாக இதனால் உனக்கு எந்தவிதமான பாதகமும் நேரப்போவதில்லை. கதிரவன்கூட வந்திருக்காத இவ்வேளையில் இது நம் இருவருக்குமிடையில் தனிப்பட்டமுறையில் நடந்துகொண்டிருக்கும் உரையாடல் மட்டுமே. எவரும் அறிவதற்கில்லை”

சுற்றும்முற்றும் பார்த்தபடியே மிகுந்த தயக்கத்துடன் சேந்தனிடம் ஓலையை நீட்டினான் விருமன். வாங்கிக்கொண்டவன், சாலையோர விளக்குக் கம்பம் நோக்கி நகர்ந்தான். தீப்பந்த ஒளி படுமாறு சாய்த்துப் பிடித்து அவசரமாய்க் கூர்ந்து படிக்கத் துவங்கினான்.

’வீரமைந்தர், சோழப் பேரரசின் ஒப்பற்ற ஆட்சியாளர், நானிலம் போற்றும் நல்மைந்தர், மாமன்னர் இராஜராஜ சோழனின் சீரிய ஆட்சிக்கு எதிராகவும், ஆட்சியின் மாண்பிற்கு களங்கம் விளைவிக்கும்விதமாகவும் செயல்பட்டுக்கொண்டிருக்கும் வேளூர்க் கூற்றத்து சாத்தன்குடி வெள்ளாளன் இரவி பாளூர் உடையார் ஒரு மாபெரும் குற்றவாளியென அரசால் தீர்க்கமாக முடிவு செய்யப்பட்டிருக்கிறது. பல எச்சரிக்கைகளுக்குப் பிறகும் தீவிரமான குற்றச்செயல்களில் ஈடுபட்டு வரும் இந்த இரவி பாளூர் உடையாருக்கு மரண தண்டனை ஒன்றே உகந்ததாக இருக்குமென அமைச்சர்களுடனான ஆலோசனைகளுக்குப் பின்னர் முடிவு செய்யப்பட்டு, மன்னரால் வாய்மொழி உத்தரவாக பிறப்பிக்கப்பட்டுள்ளது. இந்த உத்தரவை ஊர்ச்சபையினரும் குலப்பெரியதனக்காரர்களும் நிறைவேற்ற பரிந்துரைக்கப்படுகிறது.’

“எத்தனை பெரிய அக்கிரமம்?! தண்டிக்கப்படவேண்டிய பாதகன் ஒருவன், நிரபராதியான ஒருவன்மீது எப்படியெல்லாம் ஆதாரமற்ற குற்றச்சாட்டை சுமத்தி, மரணத்திற்கு வழிவகுத்திருக்கிறான். இந்தக் கொடூரத்தை என்னவென்று சொல்வது?”

“நீதி வழுவாத நமது மாமன்னரும் அமைச்சரவையும் ஆலோசித்து தீர்மானிக்கும் ஒரு விடயத்தை அக்கிரமமாக பார்ப்பது எப்படி சரியானதாக இருக்கும்?”

“இது மேகநாதனால் உருவாக்கப்பட்ட போலியான உத்தரவு என்பதுதான் தாங்கிக்கொள்ளமுடியாத கொடுமை விருமா. ஊர்ச்சபையினர் நம்பும்வகையில் அரச முத்திரையையும்கூட அவனே தயாரித்திருக்கிறான். நன்றாகப் பார், புரியும். நாட்டின் ஏதோவொரு மூலையில் உயிரிழக்கப்போகும் ஒருவனைப் பற்றி மாமன்னருக்கும் அரசவைக்கும் எங்கே தெரிந்துவிடப் போகிறது என்ற தைரியத்தில் தன்னிச்சையாக இந்தக் கொடூரத்தை அரங்கேற்றத் தயாராகியிருக்கிறான் அவன். மரண தண்டனைக்கு உரியவன் இந்த மேகநாதன்தான்”
விருமனின் முகத்தில் அதிர்ச்சியும் குழப்பமும் ஒருங்கே தெரிந்தது.

“இப்படியொரு குழப்பநிலைக்கு என்னை ஆளாக்கிவிட்டிருக்கிறீர்களே? நீங்கள் சொல்வதில் இருக்கும் உண்மைத்தன்மையை ஆராயும் உரிமை எனக்கில்லை. எனக்கு அளிக்கப்பட்ட பணியை நிறைவேற்றவேண்டிய கட்டாயத்தில் மட்டுமே நான் இருக்கிறேன்.”

“புரிகிறது. ஆனாலும், எல்லா தருணங்களிலும் ’இது மட்டுமே எனது பணி’ என்ற மனநிலையோடு செயலாற்றிவிடமுடியாது விருமா. உண்மைக்கும் அநீதிக்கும் எதிரான செயலுக்கு துணைபோவதை கடமையுணர்வோடு பணியாற்றுவதாக எடுத்துக்கொள்ளமுடியாது. இந்த ஓலை ஊர்ச்சபையை சென்றடைந்து, இரவிக்கு மரண தண்டனை நிறைவேற்றப்பட்டால், மேகநாதனுக்கு அடுத்தபடியாக நீதான் மிகப்பெரும் கொலைக் குற்றவாளியாகக் கருதப்படுவாய். காலம் முழுவதும் அவப்பெயருடனும் உறுத்தலுடனும் வாழ்வதற்கு வழிவகுத்துக்கொள்ளாதே”

“என்னை இப்பொழுது என்ன செய்யச் சொல்கிறீர்கள்?”

“நான் சொன்ன இந்தத் தகவலை இராசராஜீச்சரத்தின் பணியாளர் தலைவனாகிய பொய்கைநாட்டுக் கிழவன் ஆதித்தன் சூரியனான தென்னவன் மூவேந்த வேளானின்4 பார்வைக்கும், திருக்கானப் போர்க்கூற்றத்துப் பாளூர் கிழவன் அரவணையான் மாலரி கேவனின் பார்வைக்கும்

கொண்டு சென்று, இரவியைக் காப்பாற்ற கோரிக்கை வைக்கவேண்டும். அதற்கான அவகாசம் எனக்குக் கிடைக்கும்விதத்தில், இந்த ஓலையை ஊர்ச்சபையிடம் கொண்டு சேர்க்கும் பணியை சற்றே நீ நிறுத்தி வைக்கவேண்டும் விருமா''

விருமனின் முகத்தில் கோபம் தெரிந்தது.

''மேகநாதனைப் பற்றி இத்தனை தெளிவாக அறிந்திருக்கும் தாங்கள், அவனை தண்டிக்கும்விதமாக முன்னரே அமைச்சரவையை நாடியிருக்கவேண்டும். அவனது குற்ற நடவடிக்கைகள் அனைத்தையும் அவர்களிடம் பட்டியலிட்டிருக்கவேண்டும். அதை விடுத்து, இந்த இறுதிவேளையில் என்னை சங்கடத்திற்குள்ளாக்குவது எப்படி சரியானதாக இருக்கமுடியும்? அறிவிப்பிலுள்ள நியாய அநியாயங்களைப் பற்றி கவலைப்பட எனக்கு எந்தவித அதிகாரமும் இல்லையென்பதும் தாங்கள் அறிந்ததுதானே?''

''உனது கேள்வியிலும் கோபத்திலும் நியாயமிருக்கிறது விருமா. இத்தனைகாலமும் இரவியின் உறுதியான அறிவுறுத்தலின் காரணமாக எதுவும் செய்யமுடியாமல் கட்டுண்டு கிடந்தேன். இப்பொழுதோ அனைத்தும் கைமீறிச் சென்றுவிட்டது. செய்வதறியாமல் கலங்கி நிற்கிறேன்''

பொருத்தமில்லா காரணங்களைச் சொல்லி சமாளிக்க மனம் இடம் தரவில்லை சேந்தனுக்கு. சரணடைந்து தலைகுனிந்து நின்றான்.

''இப்பொழுதும் நேரம் கடந்துவிடவில்லை. பொதுமக்களில் எவரொருவரும் தங்களது கோரிக்கையை அரசிடம் விண்ணப்பமாக அளித்து தேவையான தீர்வுகளைப் பெற்றுக்கொள்ள சிறப்பான வழியிருக்கிறதே நம் மன்னரிடம்?!3 எனது பறையறிவிப்பினைத் தொடர்ந்து, தங்களது அவசரகால விண்ணப்பத்தை தாமதமின்றி அரசின் முன் வைத்தால் நிச்சயமாக தீர்வு கிடைக்கத்தானே போகிறது? நம்பிக்கையுடன் விரைந்து செயல்படுங்கள்''

அவனது யோசனையே சரியெனப்பட்டது சேந்தனுக்கு. 'எவரது தனிப்பட்ட உதவியையும் எதிர்பார்த்து காலத்தைக் கடத்தாமல், அரசின் பார்வைக்கு அனைத்தையும் கொண்டு செல்வதுதான் உத்தமம். தண்டனையை நிறுத்தி வைக்க குடும்பத்தார் மூலம் ஒரு மனு அளிப்பதோடு, மேகநாதனை விசாரணைக்குட்படுத்தி, இந்தப் பேரரசிற்கு எதிராக வரலாற்றைத் திரிக்க முயற்சிக்கும் அவன் யாருடைய கைக்கூலி என்பதைக் கண்டறியும் வகையில் தனி விண்ணப்பமொன்றையும் நாம் அளிக்கவேண்டும்'

விருமனுக்கு நன்றி தெரிவித்துவிட்டு, அவனது பணியை தொடருமாறு வேண்டிக்கொண்டான் சேந்தன்.

மாமன்னன் இராஜராஜன் கைகளை பின்புறமாக இறுகக் கட்டிக்கொண்டு சபையின் வடக்கிற்கும் தெற்கிற்குமாக நடந்துகொண்டிருப்பதை மொத்த அமைச்சரவையும் அச்சத்துடனே கவனித்துக் கொண்டிருந்தது. கால்களை பலமாக ஊன்றி நடைபோட்டதில் பொறுக்கமுடியாத பெருங்கோபம் தெரிந்தது.

தனது ஆசனத்தின் முன்னே சென்று நின்றவன், அமைச்சர்களைத் திரும்பிப் பார்க்காமலே கர்ஜித்தான்.

''இந்த இமாலயத் தவறுக்கு பொறுப்பேற்க போகிறவர் யார்?''

அவையில் அப்படியொரு பெரும் நிசப்தம். பதிலின்றி அனைவரும் அமர்ந்திருக்க, திரும்பினான் அவன்.

''இந்தப் பேரரசின் எந்தவொரு மூலையிலும் அணுவளவு தவறு நடந்தாலும் அடுத்த கணமே எனது பார்வைக்கு வரும் வகையில் சிறப்பான ஆட்சிபுரிந்து வருவதாகத்தான் இத்தனைநாளும் செருக்குற்றிருந்தேன். அதனை உடைத்தெறிந்து, எனது மொத்த ஆட்சிக்காலத்தையும் மாசடையச் செய்யும் வகையில் மாபெரும் குற்றம் ஒன்று அரங்கேற நீங்கள் அனைவரும் மறைமுகமாக காரணமாகியிருக்கிறீர்கள். வெட்கித் தலைகுனிகிறேன். சேந்தனைப் போன்றதொரு கடைநிலை ஊழியன் இல்லாமல் போயிருந்தால், கலைத்திறமை படைத்த அந்த குதிரைப்படை வீரனின் உயிரும் அவனது குடும்ப நிலையும் என்னவாகியிருக்கும்? சோழப்பேரரசின் வரலாறு எப்படியெல்லாம் இழிவுபடுத்தப்பட்டிருக்கும்? இத்தனை பெரிய குற்றவாளியொருவன் தலைமை அதிகாரி என்ற பெயரில் பெருவுடையார் கோவில் வளாகம் முழுவதும் பரியில் வலம் வந்து அரசு ஊதியம் பெற்று உயிர் வளர்த்திருக்கிறான். ஆனால், உங்களில் எவருக்கும் அப்படியொருவனை பார்த்ததாகவே நினைவிலில்லை, அப்படித்தானே?''

அமைச்சர் ஜெயந்தன் தயக்கத்துடனே எழுந்தான்.

''மன்னியுங்கள் மாமன்னரே. விளக்கம் கொடுத்து சரிசெய்யக்கூடியதல்ல இந்தத் தவறு. மன்னிக்கமுடியாத மாபெரும் தவறு. இதற்கான பொறுப்பை நானே ஏற்றுக்கொண்டு பதவி விலகுகிறேன். அதுவே முறையானதாக இருக்கும்''

இராஜராஜனின் விழிகள் விரிந்தன.

''ஜெயந்தா.. நீ எதற்காக பதவியைத் துறக்கவேண்டும்? வட தமிழகத்தின் பதினெட்டு சிற்றரசுகளை வென்றதைக் கொண்டாடுவதற்கும், எனது புகழ்பாடுவதற்காகவும் திரிசூலகிரியென்னும் மாநகரையே அற்புதமாக உருவாக்கியவன் நீ5. உன்னால் எனது ஆட்சிக்கு என்றும் களங்கமில்லை. நீ எனக்குக் கிடைத்தது பெரும் பேரு மட்டுமே. வீண் துயர்கொண்டு மற்றவர்களைக் காப்பாற்ற

முயற்சிக்காதே. இந்தக் குற்றத்தில் நீ பங்கேற்பதை என்னால் ஏற்க முடியாது"

"இல்லை மன்னா. அந்த மேகநாதனின் செயலுக்கு என்மீதான வன்மமும் ஒரு காரணமாகியிருக்கும் நிலையில், இந்தத் தவறுக்கு நானே மூலகாரணமாகியிருக்கிறேன்"

"புரியவில்லை ஜெயந்தா. சோழப் பேரரசின் மாட்சிமைக்கு களங்கம் உண்டாக்குமளவிற்கு அப்படியென்ன மேகநாதனுக்கும் உனக்கும் பகை நிலவிக்கொண்டிருக்கிறது? யார் அவன்?"

"தாங்கள் பெருமையாகக் குறிப்பிட்ட திரிசூலகிரிதான் இப்படியொரு துரோகியை உருவாக்கிவிட்டிருக்கிறது மன்னா. இந்த மேகநாதன் வல்லாள வம்சத்தில் வந்தவன் என்பதை விசாரணை மூலமே அறிந்தேன். இவர்களது பகுதியை நாம் வெற்றிகொண்டது மட்டுமல்லாமல், இந்த வெற்றியைக் கொண்டாட பர்வதமலை பகுதியிலேயே ஒரு மாநகரை நான் உருவாக்கியதை இவர்களைப் போன்ற சிலரால் ஏற்றுக்கொள்ள இயலவில்லை. வெற்றிக்களிப்பில் அவர்களின் உணர்வுகளை நான் புண்படுத்திவிட்டதனால் உண்டான விளைவும், அவர்களது இயலாமையுமே நமக்கு எதிரான திட்டங்கள் பலவற்றை தீட்ட வைத்திருக்கிறது"

கோபம் குறையத் துவங்கி, ஆசனத்தில் அமர்ந்து சிந்திக்கத் துவங்கினான் இராஜராஜன். அமைச்சர் ஜெயந்தனோ தனது விளக்கத்தை தொடர்ந்தபடியிருந்தான்.

"திட்டமிட்டே நமது அரசாங்கத்திற்குள் புகுந்து பணியாற்றத் துவங்கிய இந்த மேகநாதன், எங்களில் எவருக்கும் சந்தேகம் ஏற்பட்டுவிடாதவகையில் சிறப்பாகவே பணியாற்றி வந்திருக்கிறான். பாறைக்குள் உயிர்பிழைக்கும் தேரை போல் உள்ளிருந்தே செயல்பட்டுவந்த இவனது செயலை அறியாமல் விட்டது மாபெரும் குற்றம்தான். இவனது கட்டளைக்கும், பொன் பொருளுக்கும் வேளூர்க்கூற்றத்து வீரன் இரையாகியிருந்தால் இந்த சோழப் பேரரசின் வரலாறு எத்தனை பாழ்பட்டிருக்குமென்பதை நினைத்துப் பார்க்கவே மனம் அஞ்சுகிறது மன்னா. தயைகூர்ந்து மறுக்காமல் எனது பதவி விலகலை ஏற்றுக்கொள்ளுங்கள்"

"இந்த வழக்கை மேலும் சற்று தீவிரமாக விசாரித்துவிட்டு அதன்பின்னர் அதுகுறித்த நடவடிக்கையை வெளியிடுகிறேன். அதுவரை பொறுத்திருங்கள்"

பெருவுடையார் கோவிலின் குடமுழுக்கு கோலாகலமாய் முடிவுற்று நாடே பேருவுகையில் பூரித்திருக்க, அமைச்சர்களின் முகத்தில் மட்டும் கலக்கம் நிறைந்திருப்பதைக் கண்ணுற்றான் இராஜராஜன்.

"ஜெயந்தா.. குடமுழுக்கு விழா அமைச்சர் பெருமக்களுக்கு ஏற்புடையதாக அமையவில்லையா, அல்லது வேறு ஏதேனும் குற்றம் குறை கண்டுள்ளீர்களா? எதுவாக இருப்பினும் மனம் திறந்து தெரிவிக்கலாமே? ஏன் அனைவரின் முகத்திலும் இனம்புரியாதவொரு பாவனை, கலக்கம்?"

"தனித்துவம் வாய்ந்த அதிசய படைப்பான இத்திருக்கோவில் உருவான காலத்தில் நாங்கள் வாழ்ந்திருப்பதும், இப்பூவுலகம் உள்ளவரை வியந்து போற்றவிருக்கும் தங்கள் ஆட்சி அதிகாரத்தின் கீழ் நாங்கள் அமைச்சர்களாக இடம்பெற்றிருப்பதும் எங்களுக்கு இறைவன் அளித்த மாபெரும் வரம் அரசே. இந்த குடமுழுக்கு விழாவில் மக்களைப் போலவே நாங்களும் மனம் குளிர்ந்திருக்கிறோம். அனைவரின் முகத்தில் தெரிவதெல்லாம்.. மேகநாதன் விடயத்தில் தாங்கள் எடுக்கப்போகும் முடிவு குறித்த அச்சம்தான்"

பெருமூச்செறிந்தான் இராஜராஜன்.

"ம்.. அப்படியானால் இந்த வழக்கு குறித்த முடிவை தள்ளிப்போடாமல் இன்றே அறிவித்துவிடவேண்டியதுதான்"
அவை கூடியிருந்தது.

மேகநாதன் குற்றவாளியாக முன்னிறுத்தப்பட்டிருக்க, அமைச்சர் பெருமக்களோ நிலையின்றி தவித்துக் கொண்டிருந்தார்கள். மரணத்தை மனமுவந்து ஏற்றுக்கொள்ளும் மனநிலைக்கு வந்திருந்த இரவி, எவ்வித கலக்கமுமின்றி ஒரு ஞானியைப் போல் நின்றிருந்தான்.

இராஜராஜனின் வருகை அறிவிப்பைத் தொடர்ந்து அனைவரும் எழுந்துகொள்ள, சிங்கம் போல் கம்பீர நடைபோட்டு தனது ஆசனத்தை வந்தடைந்த இராஜராஜன், அனைவரையும் ஒருமுறை அமைதியாய் பார்த்தான்.

"மாண்புமிகு அவையை வணங்கி அமர்கிறேன். ஈசன் எனக்களித்த கொடையாம் அமைச்சர் பெருமக்களாகிய உங்கள் அனைவரது ஒத்துழைப்பைக் கொண்டே நான் எண்ணிய காரியங்கள் அனைத்தையும் இத்தனைக்காலமும் ஈடேற்றி வந்திருக்கிறேன். என் அப்பன் பெருவுடையாரின் பிரம்மாண்டமான வடிவமும் திருத்தலமும்கூட இன்று அவ்வாறே சாத்தியமாகியிருக்கிறது. தமிழர்களின் கலைத்திறனை இவ்வுலகுக்கு எடுத்தியம்பும் ஆயிரக்கணக்கான படைப்புகளில் நமது பெருவுடையார் கோவில் முதன்மையான படைப்பாய் ஓங்கி உயர்ந்து, உலகையே வாய்பிளந்து பார்க்க வைத்திருக்கிறது. இந்த உருவாக்கத்தில் தோளோடு தோள் நின்ற உங்கள் அனைவருக்கும் எனது சிரம்தாழ்ந்த நன்றி. இந்த மாபெரும் பணியில் பங்கேற்ற எவரையும் காலம் போற்றிக்கொண்டிருக்கவேண்டும் என்ற உறுதியான முடிவினாலேயே துப்புரவு பணி மேற்கொண்ட நன்மக்கள் வரை அனைவரது பெயரையும் கல்வெட்டில் பொறிக்க ஏற்பாடு செய்தேன். இந்த வரலாற்றுப் பதிவில் நடக்கவிருந்த மாபெரும் தவறை எனது அன்புக்குரிய

வீரன் வேளூர்க்கூற்றத்து இரவி பாளூர் உடையார் தன் உயிரை துச்சமென நினைத்து தடுத்திருக்கிறான். அவனை வணங்கவேண்டியதும் எனது கடமையாகிறது"

இராஜராஜன் எழுந்து நின்று இரவியை நோக்கி வணங்க, அவனோ, 'வரலாறு போற்றவிருக்கும் சோழப்பேரரசின் ஒப்பற்ற மாமன்னனும் மாவீரனுமாகிய இராஜராஜன் இந்த சிறியோனை நோக்கி வணங்குவதா?' என பதறி, செய்வதறியாது நாதழுதழுத்து, கண்கள் குளமாக தலைவணங்கினான்.

மேகநாதனை நேருக்கு நேராகப் பார்த்தான் இராஜராஜன். வலிமை மிகுந்த இராஜராஜனின் கண்களை சில விநாடிப்பொழுதுகூட எதிர்கொள்ளமுடியாமல் தவித்தவன், மிடறு விழுங்கி குனிந்துகொண்டான்.

"கலங்கத் தேவையில்லை மேகநாதா! எந்தவொரு சிறு குற்றத்திற்கும்கூட விசாரனையின்றி தண்டனை விதிப்பதென்பது சோழ வரலாற்றில் எப்போதும் இருந்ததில்லை. உனது மண்ணையும் மக்களையும் நான் கைப்பற்றியதுதான் உனக்கு கோபத்தை உண்டாக்கியிருப்பதாக அறிந்தேன். தனது மண்ணின் மீதும் ஆட்சியாளனின் மீதும் பற்றுக்கொண்ட எந்தக் குடிமகனையும் எனக்கு நிரம்பவே பிடிக்கும். அந்த வகையில் எனது அன்பைப் பெற்றவனாகிறாய் நீ. படையெடுப்பு, வெற்றி தோல்வி, புகழ்பாடிக் கொள்வது, கடவுள் வழிபாடு போன்றவற்றையே ஆட்சியாளர்களாகிய நாங்கள் வாழ்க்கையாக்கிக் கொண்டுவிட்டோம், என்ன செய்வது? எனது வெற்றியும் அதனைத் தொடர்ந்துவந்த கொண்டாட்டமும்தான் உனது எதிர்மறை செயல்களுக்கான உந்துதலாக அமைந்திருக்கிறதென்றால் எந்த நிபந்தனைகளுமின்றி உன்னை விடுதலை செய்வதில் எனக்கு எந்த ஆட்சேபணையும் இல்லை. மாறாக, நான் அறியாத வலிமையான காரணங்கள் வேறெதுவும் உன்னிடத்தில் இருப்பின் தயங்காமல் இந்த அவையின் முன் வைக்கலாம். செய்தது குற்றமாக இருந்தாலும் அதில் உள்ள நியாயங்கள் நிச்சயமாகக் கருத்தில் கொள்ளப்படும். இந்த வழக்கில், உனது வாக்குமூலத்தின் அடிப்படையிலேயே எனது நடவடிக்கை அமையவிருக்கிறது"

மேகநாதனின் கண்கள் கலங்கியிருந்தன.

"அரசே ! கடல்கடந்து பரந்துவிரிந்திருக்கும் ஒரு சாம்ராஜ்யத்தின் பேரரசன் என்ற கர்வம் துளியுமின்றி குற்றவாளியுடன் இத்தனை இயல்பாய் உரையாடிக் கொண்டிருக்கும் தங்களது குணாதிசயம் என்னை கூனிக் குறுகச் செய்கிறது. தங்களை பழிவாங்குவதாக எண்ணிக்கொண்டு இந்தப் பேரரசை வீழ்த்தக் காத்திருக்கும் எதிரிகளோடு கைகோர்த்துவிட்டேன். என்னை மன்னியுங்கள் மாமன்னரே. தாங்கள் அளிக்கும் தண்டனை எதுவானாலும் மனமுவந்து ஏற்றுக்கொள்ளக் காத்திருக்கிறேன்"

மேகநாதன் அழுதபடியே கைகூப்பி வணங்கினான்.

"வாழ்க்கையில் எந்தவொரு சம்பவமும் காரணகாரியங்களின்றி நடைபெறுவதில்லை என உறுதியாக நம்புபவன் நான். இப்பொழுதும் அப்படியே. மேகநாதா, உன்னுடன் நட்பு பாராட்டிய எதிரிகளின் பட்டியலை மட்டும் பாதுகாப்பு அமைச்சரிடம் தனிமையில் தெரிவித்துவிட்டு உனது அரசுப் பணியைத் தொடரலாம்"
"அமைச்சர் பெருமக்களே.. உங்களனைவருக்கும் இந்த சம்பவம் ஒரு பாடமாக அமையட்டும். நம்முடன் உலா வரும் அனைவரும் நமக்கு சாதகமானவர்களென்ற நேர்மறை சிந்தனை கொண்டிருப்பதில் தவறில்லை. அதேநேரம், நாட்டின் பாதுகாப்பை மனதில்கொண்டு, முக்கிய பணியிலிருப்போர் ஒவ்வொருவரின் செயல்பாடுகள் மீதும் உங்கள் பார்வை நிலைகுத்தியிருக்கவேண்டும். தவறெதுவும் நடக்காமல் தடுக்கப்பட்டுவிட்டதன் மூலம் எனது கோபம் கரைந்துபோயிருக்கிறது. எவரும் அச்சப்படத் தேவையில்லை"
மன்னனுக்குத் தெரியாமல் பெருமூச்சு விட்டுக்கொண்டார்கள் அமைச்சர்கள்.

"மேகநாதனின் குற்றம் மன்னிக்கப்பட்டுவிட்ட நிலையில், அவனை தற்போதைய பணியிலிருந்து விடுவித்து, அவனது பகுதி மக்களுக்கு நன்மைபுரியும் விதமாக அதே பகுதியில் தலைமைப் பதவியொன்றில் அமர்த்துங்கள். வேலூர்க்கூற்றத்து இரவி பாளூர் உடையாரை இன்றுமுதல் குதிரைப்படையின் தலைமை வீரர்களில் ஒருவனாக நியமிக்கிறேன். அத்துடன், அவனது உற்றார் உறவினர் பெருமைப்படும் வகையிலும் அவனது தேசப்பற்று ஏனைய மக்களை சென்றடையும் வகையிலும் பொதுவிழாக்களில் மேடையேற்றி கௌரவப்படுத்தவும் இந்த அவைக்கு உத்தரவிடுகிறேன். தக்க சமயத்தில் இந்த விவகாரத்தை அரசின் பார்வைக்கு கொண்டுவந்து, தனது பெருமதிப்புக்குரிய நண்பனின் உயிரைக் காப்பாற்றியதுடன் அரசவைக்கும் பாதுகாப்பு பற்றிய விழிப்புணர்வை உண்டாக்கியிருக்கும் வீரன் சேந்தனை எந்தவகையில் கௌரவப்படுத்தலாம் என்பதை இந்த அமைச்சரவை முடிவு செய்யும்"

குடமுழுக்கிற்குப் பிறகான பிரதோஷ தினம்.

மேகநாதன், இரவி பாளூர் உடையார், சேந்தன், அமைச்சர் பெருமக்கள் என அனைவரும் தத்தம் குடும்பத்தாருடன் பெருவுடையாரின் முன்னே கைகூப்பி நின்றிருக்க, மாமன்னன் இராஜராஜனும் அவர்களுடனே சமமாய் வந்து நின்றுகொண்டதைக் கண்ட அவனது மக்கள் பூரித்து, போற்றி மகிழ்ந்தனர்.

# எடுத்தனூர் எருமைக் களவு

## திரு. சிவலிங்கம்

வேப்பூரின் வடமேற்கு எல்லைக் காடு. சிறுவீடு மேய்ச்சலுக்காக அதிகாலையிலேயே புறப்பட்டிருந்தது ஒரு மந்தை. அம்மந்தை காவட்டனுடையது. கன்றுகள், கறவைகள், நல்லெருதுகள், கொல்லெருதுகள் என எண்ணிக்கையில் இருநூறு மாடுகளைக் கொண்டது. விடலையரும், வலுக்குறைந்து வயோதிகம் அரும்புபவருமாக ஐவர் கொண்ட குழுவினர் அம்மந்தையினை மேய்ப்பவர்கள். இவர்களோடு வேப்பூரின் முதுகிழவர்களில் ஒருவனான களியனும் அம்மந்தையுடன் அன்று சென்றிருந்தான். களியன் கொன்றை நாட்டு ஊர்களின் பழங்கதைகள் பலவற்றையும் நன்கறிந்தவன். தொழுவத்திலிருந்து மேய்ச்சலுக்கான இடம் வரும்வரை பொழுதுபோக்கிற்கு நேரமிருக்காது. மந்தை இருபுறக் கொல்லைகளின் விளைச்சல்களில் இறங்காமலும், மேய்ந்துவிடாமலும் தடுப்பதிலேயே மந்தையினர்க்கு நேரம் போதாது. விளைச்சலுக்கான காட்டினைத் தாண்டி மேய்ச்சலுக்கான காட்டினை அடைந்துவிட்டால்; மந்தையினைக் கட்டுபடுத்தவும், தகவலினை அடுத்த மந்தையினரோடு பரிமாற்றிக் கொள்ளவும் மந்தையினர் வீளையோசையினை ஒரு மொழியாக்கிக்கொள்வர். வீளையின் பிள்ளையே குழல். வீளையோசையும் குழலோசையும் காடெங்கும் பரவி மந்தையினையும், காட்டு வழிப்போக்கரையும் மயக்கும். பொழுதினைப் போக்க வட்டாடல், மரமேறல், கண்கட்டியாடல், வலு சோதித்தல், அம்பெய்தல் என பலவற்றில் மந்தையினர் ஈடுபடுவர்.

அன்றும் காவட்டனுடைய மந்தையினர் வேப்பூர் காட்டின் வடமேற்கினை அடைந்தனர். கொல்லெருதுகள் தனியாகவும், சுரக்கும் பசுக்களும்;, சுரக்காப் பசுக்களும், சேங்கன்றுகளும், கிடாரிகளும் நல்லெருதுகளுடனும், தனித்தனிக் குழுவாகவும் தமக்குப் பிடித்த இடங்களைத் தேர்ந்து மேயத் தொடங்கின.

மந்தையினர் ஐவரும், மந்தையினை முழுமையாகப் பார்க்கும் வகையில் ஒரு பாறையைத் தேர்வு செய்து களியனுடன் சென்று அமர்ந்தனர். நடையினாலும் , மந்தையை வழிப்படுத்த பல்வேறு வகையில் குரலெடுத்ததாலும் அவர்களுக்கு ஓய்வு தேவைப்பட்டது. அது வழக்கமானது தான். களியன் முதுவன் என்பதால் மந்தைக்கு அவன் குரலும், நடையும் தேவைப்படுவதில்லை. அவன் மந்தையினர்க்கு மட்டுமே தேவைப்பட்டவன். அவன் தங்கள் மந்தையுடன் வருவதை ஒவ்வொரு மந்தையினரும் விரும்புவர். கானத்து விலங்குகளினால் வரும் ஆபத்துகள் எதுவென்றாலும் களியனின் அனுபவத்தினால் அவற்றைச் சமாளிக்கும் திறமையினை மந்தையினர் பெறுவர் என்பதால் களியன் மந்தையுடன் கலக்கும் நாளில் தமது பொழுதுபோக்குகள் அனைத்தையும் தவிர்ப்பர். களியன் தன் கால்கள் செல்லும் திசையில் எதிர்ப்படும் மந்தையினரோடு கலந்துவிடுவான். அன்றைய பொழுதும் அவனுக்குக் கடந்துவிடும் உடன் மந்தைக்கும்.

விடியலிடமிருந்து இருள் விடைபெற்றுக்கொண்;டிருந்தது. புதர்களைப் போர்த்தியிருந்த வெண்பனி ஆதவனின் வருகையால் நீர்த்திவலைகளானது. நீர்த்திவலைகளின் வழியே வானவில்; பல தோன்றி வேப்பூர் காட்டினை வண்ணமயமாக்கின. ஆதவனின் சுடரம்புகள் பட்டு மரகதப்பச்சிலைகளால் புன்னகைத்துக் கொண்டிருந்தது, அவர்கள் அமர்ந்திருந்த பாறைக்கு குடையாய் அமைந்திருந்த வேங்கை மரம்.

அசதியை கழித்துக்கொண்டிருப்பவர்களின் அமைதியை கலைக்கும்விதமாக களியன் ஆரம்பித்தான.; ' இது காவட்டன் மந்தை தானே?'' ' அவன் மகன் ஆத்திரையன் எங்கே?'' என வினவினான்.

ஆத்திரையனுக்கு ஏதும் வைத்திருக்கிறாயா முதுவா? 'அதோ அமர்ந்திருக்கிறானே இதுவரையிலா அவனை கவனிக்கவில்லை?'' என்று மந்தையினரில் மூத்தவன் ஒருவன் விடலையன் ஒருவனை நோக்கி விரல் காட்டினான். அவனால் காட்டப்பட்டவன் களியனுக்கு வலப்பக்க பின்புறத்தில் அமர்ந்திருந்தான்.

'ஆமானிற்கும் மரையாவிற்கும்'' வித்தியாசம் அறியாதவன் அல்லடா இந்த களியன் என்று குறுமுறுவலுடன் பின்பக்கம் திரும்பாமலேயே பதிலுரைத்தான் களியன்.

முதுமையினால் பார்வைத் திறன் குன்றியிருக்கும் என்றெண்ணி, கிழவனிடம் பரிகாசம் செய்ய எண்ணி தோல்வியுற்றிருந்தனர் அந்த ஐவரும். அந்த அதிர்ச்சியிலிருந்து மீளா நிலையிலிருந்தவாறே, அங்க அவயங்கள் தளர்வுற்று , தள்ளாத நிலையினை எய்தியும், ஆட்களை எவ்வாறு அனுமானிக்கின்றீர்? என்ற அடுத்தவன் வினவினான்.





களியன் தொடர்ந்தான். வேப்பூரின் அனைத்து குடிகளையும், அவர்களின் பூர்வீகத்தினையும் நான் நன்கறிந்தவன். ஆத்திரையன் ஆமான் போன்றவன். தன்னெதிர் நிற்பது புலியா நரியா என்பதை உற்று நோக்கி அடுத்த கட்டத்திற்கு ஆயத்தமாகுமே தவிர, குறுபுதர் அசைந்தாலும் தப்பிக்க எத்தனிக்காத தன்மையது ஆமான். ஆமானுக்கு வரிப்புலி மட்டுமே எதிரி. வரிப்புலி அல்லாத வேறெந்த காட்டு விலங்கும் ஆமானை வேட்டையாட துணியாது. ஆமானுடன் நேரெதிர் சண்டையிடும் தீரம் மரையாவிற்கு இருந்தாலும், மரையாவினை வேட்டை விலங்குகள் அனைத்தாலும் வேட்டையாட இயலும். தப்பி ஓடும் திறமை மட்டுமே மரையாவிற்கு தனிச்சிறப்பு. ஆமான் நேரெதிர் நின்று தாக்கக் கூடியது. அத்தகைய ஆமானைப் போன்ற வேப்பூர் வாலிபர்களை தேர்ந்து, அவர்களுக்குரிய பூர்வீகத்தாரின் வீரதீரங்களை அவர்களிடமிருந்து வெளிக்கொணர்வதையே நான் இப்போது செய்துகொண்டிருக்கிறேன். அதன் பொருட்டே இன்று அவனைத் தேடுகிறேன் என்று முடித்தான்.

தங்களது வேடிக்கைத் தனத்தை ஒதுக்கிவிட்ட ஐவரும், களியனின் குறிக்கோளை உணர்ந்தவராயினர்.

ஐவரில் மூத்தவனே தொடர்ந்தான். கதிரவனின் முதல் கதிர் பூமியில் விழுகையில் ‘நான் மந்தை சேர்வேன்’’ என ஆத்திரையன் சொன்னதாகத் தெரிவித்து, வேப்பூர் இருக்கும் திசையான தென்கிழக்கை நோக்கினான்.

பன்னிரு கண்களும் அத்திசை நோக்கின. பனை வில்லொன்றினை வலது தோளிலும், அம்பறாத் தூணியினை இடது தோளிலும் தரித்து சிறுவீளையின் வழி பாட்டிசைத்தவனாய் இளமைத் துடுக்கொடும், கம்பீர நடையுடனும்; அவர்களை நோக்கி வந்து கொண்டிருந்தான் ஆத்திரையன்.

ஆத்திரையானைத் தொலைவிலேயே கண்டதும் களிப்புற்றான் களியன். தங்களது இருப்பிடத்தை அவனுக்குத் தெரிவிக்க, வீளை ஓசையிடுமாறு களியன் கூற, ஐவரில் இளையவன் துள்ளியெழுந்து ஆத்திரையனை நோக்கி நெடுவீளை எழுப்பினான். உடன் தன் தலையில் கட்டியிருந்த வெண்ணிறத் துணியினை அவிழ்த்து சைகையும் காட்டினான். வீளையோசையைக் கொண்டு தம் மந்தையாட்கள் தாம் என்பதை உறுதிப்படுத்திக் கொண்டு அவர்களை நோக்கி நடந்தான். பாறையை அடைந்தவன் அங்கு களியன் இருப்பதைக் கெண்டு வியப்பற்றவனாய், ‘என்ன முதுவரே?’’ நலமா? ஒரே ஊரில் இருந்தாலும் உம்மை பார்ப்பது குதிரைக் கொம்பாயிருக்கிறதே?’’ என்றான் மந்தையின் நிலையை சுற்றுமுற்றும் பார்த்தவாறே.

ஆயினும் ‘ மூதாதையரின் மாண்பினையும், மறத்தினையும் அடுத்தடுத்த தலைமுறைகளுக்கு கடத்துவதையே மாண்புடை வாழ்க்கை’’ என்பதை அறிந்து அதன்படி வேப்பூரார் அனைவரின் மறமாண்புகளை எடுத்துரைப்பதில் வல்லானென களியனைப் பற்றி நன்கறிந்தவன் ஆத்திரையன். அவன் நோக்கமின்றி எந்தை மந்தையிலும் கலக்கமாட்டான் என்பதால், அவனது இன்றைய வருகை ஏதோ முக்கிய காரணம் கொண்டுள்ளது என்பதை உணர்ந்துகொண்டான்.

வீளையிட்டவன் ஆரம்பித்தான். ஆத்திரையா நீ சன்று தாமதமாய் வந்தாலும், வந்தாய். இந்த

முதுகிழவன் ‘ ஆமானென்றும்” ‘ மரையாவென்றும்” தொலைத்தெடுத்துவிட்டார். நீ ஆமானைப் போன்றவனாம். அதற்கென ஒரு பெரிய விளக்கமே கொடுத்துவிட்டார். எங்களுக்குப் புரிந்ததை மட்டும் மண்டையில் ஏற்றிக் கொண்டோம். மீதத்தை நீயே ஏற்றிக் கொள் என்றான்.

கருநிற மேனி, அரைவட்ட வழுக்கைத் தலை, வழுக்கையற்ற ஓரங்களில் வெண்ணரையுடன் கூன் விழுந்த ஒடிந்த தேகம் கொண்டிருந்தும், வேங்கையின் கந்தில் சாய்ந்துகொண்டிருந்த களியனை சிறு குழப்பத்துடன் அனுகினான் ஆத்திரையன்.

ஆத்திரையன் அருகில் வருவது கண்டு வாயிலிருந்த வெற்றிலை எச்சிலை திரும்பி துப்பிவிட்டு பேசத் தயாரானான் களியன்.

வாயில்வெற்றிலைஇருந்ததால்பதிலுரைக்கவில்லையோ முதுவரே என்றவாரே களியனின் அருகில் அமர்ந்தான் ஆத்திரையன். உதட்டோர எச்சிலினைத் தன் இடுப்புக் கச்சையினைக் கொண்டு துடைத்தவாறே துவங்கினான் களியன்.

‘ கருந்தேவகத்தி” என்றவாறே உள்வாங்கியிருந்த விழிகள் அகல ஆத்திரையன் கண்களை நோக்கினான் களியன். ‘ கருந்தேவகத்தியா “ அவர் யார்?” என்று ஆத்திரையன் வியப்பு மேலிட, உன் முப்பாட்டனுக்கும் முப்பாட்டன் அவர் என்றான் களியன்.

மேலும் தொடர்ந்தவாறே, ‘ஆம் உன் முப்பாட்டன் அவன். அவனை உன்னில் காண்கிறேன் நான்” என்றான்.

எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. விளக்கமாகக் கூறுங்கள் முதுவரே எனற ஆத்திரையனின் மொழிக்கு களியனின் நாவிலிருந்து மழையெனக் கொட்டியது கருந்தேவகத்தியின் மறமாண்புகள் மறுமொழி வடிவில்.

இன்றிலிருந்து இருநூறு ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்த ஒரு நிகழ்வு அது. நம் வேப்பூரின் தென்கிழக்கிலுள்ள எடுத்தனூரில் பெரியன்; என்பவரின் மகனாய்ப் பிறந்தவர் தான் கருந்தேவகத்தி. கொன்றை நாட்டுத் தலைவர்களில் ஒருவராகத் திகழ்ந்த பொற்றொக்கையார் என்பவரின் சேவகனாக விளங்கியவர். கோட்டினம் என்னும் எருமை நிரை வளர்த்து வளம் கொண்டிருந்த குடியைச் சேர்ந்தவர். அம்பெய்தலிலும், வாள்வீச்சிலும் நிகரற்று விளங்கியவர். வேங்கை மரத் தின்மையுடைய உடல்வாகும், கொல்லெருதின் பாய்ச்சலும், புத்திக் கூர்மையும் கொண்டவர். எதற்கும் அஞ்சாதவர் என்பதால் எடுத்தனூரார் இடத்தில் கருந்தேவகத்தியின் சொல்லுக்கு எதிர்ச்சொல் எப்போதும் எழுந்ததில்லை. தேவகத்தியிருக்க பயம் தேவையில்லை என்பது அவ்வூரார் அனைவரிடத்திலும் நம்பிக்கை நிலைத்திருந்தது.

கருந்தேவகத்தியின் குறும்பு இரண்டாயிரம் எருமைகளைக் கொண்டு நிரம்பியது. அவரின் எருமைகள் குடம் பால் கரக்கும் சிறப்பினையுடையவை. அவரின் எருமை நிரை போல் நிரை கொண்டால் நிலத்தில் அனைத்து வளங்களையும் கைக்கொள்ளலாம் என கண்டோர் பேசுவதுண்டு. அவரது தொழுவிலிருந்து ஒரு எருமையாவது தங்களுக்குக் கிடைத்தால் , அதிலிருந்து குடம்பால் கரக்கும் நிரையினைத் தாமும் பெற்றுக்கொள்ளலாம் என்ற எண்ணத்தில், நாள் தோறும் ஒரு மருத நிலத்தான் கருந்தேவகத்தியின் வீட்டு வாசலில் வந்து நிற்பதுண்டு. உயிர் நீங்கினாலும் நிரை நீங்கார் என்னும்; ஆயர் குடி மரபிலிருந்து பெரியன் மகனும் விலகியதில்லை.

வணிகத்திற்கன்றி வறுமையில் வாடுவோர், புதுமணம் புரிந்தோர் போன்றோர்க்கு அவர்தம் குடி விளங்க தன் நிரையிலிருந்து ‘காரான்” எருமை, நாவு, இரட்டை போத்து என அவர்தம் நிலையறிந்து கருந்தேவகத்தி தானமாகவே வழங்குவார். அவ்வாறு தானம்பெற்று பொலிவுற்ற குடிகள் பல அவரைப் போற்றின .

கருந்தேவகத்தியின் குறும்பு எடுத்தனூருக்கு நேர் மேற்கே அமைந்துள்ள பீர்க்கங்குன்றுகளுக்கு பின்புறம் தென்பெண்ணையாற்றின் கிழக்குக் கரையில், கிழக்கில் பீர்க்கங்குன்றினையும்;, மேற்கிலும் தெற்கிலும் தென்பெண்ணையாற்றினையும், வடக்கில் மேய்ச்சலுக்காக எடுத்தனூரார் பயன்டுத்தும் விடு நிலத்தினையும் இயற்கை அரண்; கொண்டது.

இப்பகுதியில் கொன்றை, தணக்கம், தேக்கு, இருள், வேம்பு, ஆச்சா, அரசு, ஆல் அத்தி, பலா, தேற்றா, நீர்ப்புங்கன், இலுப்பை, மணிப்புங்கன், மூங்கில், உன்னை, உதியன், அவுஞ்சி, இலந்தை போன்ற மரங்களையும், அவற்றுடன் ஈங்கை, இண்டு, சூரல், அதிரல், உயவை, நறவம் போன்ற கொடிகளையும், ஊகம்புல், எருவை, வெட்சி, கரந்தை, ஆவிரை போன்ற செடி வகைகளையும் கொண்ட அடர்த்தியற்ற குறுங்காடும் இருந்ததால் பீர்க்கங்குன்றுப் பகுதியினை அயலார் எவரும் சுற்றி வந்துவிட முடியாது.

பீர்க்கங்குன்றேறி மேற்கு நோக்கினால் தனது குறும்பினை எளிதில் காணும்வண்ணம் அகன்றதாயும், இரவு வெளிச்சத்திற்கென விளக்குத் தூண்களுடனும் கருந்தேவகத்தி அமைத்திருந்தார். குன்றேறி ஒற்றையடி வழியில் குறும்பினையும், குறும்பிலிருந்து குன்றினைக் கடந்து வீட்டினையும் தானும் விரைந்து கடப்பதுடன், குறும்பர்களில் பலரையும் அதற்குப் பழக்கியிருந்தார். அக்குன்றின் ஒற்றையடி வழியினை வேற்றார் யாரும் அறியாவண்ணம் எடுத்தனூரார் மட்டுமே பயன்படுத்துவர். அக்குன்றிலிருந்து கொம்பூதியும், முழவினை எழுப்பியும் ஆபத்து குறித்த தகவல்களை எடுத்தனூரார் தம் குடிகளுக்கு எளிதில் கடத்துவர். தென்பெண்ணை வளம்கொடுத்தாலும், பீர்க்கங்குன்று தன் பங்கிற்கு எடுத்தனூருக்கு நல்லரண் கொடுத்தது.

குறும்பு என்பது சிறு காட்டரண் ஆகும். காட்டில் எளிதில் கிடைக்கும் புதர்ச் செடிகளையும், முட்களைக் கொண்ட கொடிகள் மற்றும் முட்களைக் கொண்ட மரங்களைக் கொண்டு மதில் போன்று அமைப்பதாகும். குறும்பிற்கு ஒரேயொரு சிறுவாயிலினை மட்டும் அமைப்பது வழக்கம். நிரையின் போக்கு வரவினை எளிதில் கண்காணிக்கவும், எதிரிகளால் எளிதில் உள்ளே நுழைவதைத் தடுக்கவும் ஒரு வாயில் அமைப்பர். குறும்பின் காவலில் சிறந்து விளங்கியவர்;களை குறும்பர் என அழைப்பர். குறும்பர்களுக்கு ஊதியமாக ஆண்டு வீதத்தில் கன்றுகளையோ அல்லது தானியங்களாகவோ வழங்குவர்.

தென்பெண்ணை கார்;காலத்தில் மட்டும் ஆர்ப்பரித்து ஓடும் தன்மையது. மற்ற காலங்களில் பெய்யும் மழைக்கேற்ப நீரோட்டம் உடையது என்றாலும் நீருக்கு குறைவிருக்காது. எருமைகள் எப்போதும் குளிர்ச்சியுடனே இருக்க விரும்புபவை என்பதாலும், மேய்ச்சலுக்கும் நீருக்கும் அலைச்சல் இருக்கக்கூடாது என்பதற்காக குறும்பினை அமைக்க அதன்; கரையினைத் தேர்வுசெய்திருந்தார் கருந்தேவகத்தி.
அதிகாலை மேய்ச்சலான சிறுவீட்டிற்கென தனியாகவும், பகல்வேளை மேய்ச்சலான பெருவீட்டிற்கென தனியாகவும் நிரைகள் பிரிக்கப்பட்டு, அதற்கென தனித்தனிக் குழுக்கள் நியமிக்கப்பட்டிருந்தன அவரது தொழுவில். நிரைகளின் சாணத்தைச் சேகரித்து எருக்குழியில் இடுதல், தொழுவின் தூய்மைப் பணிகளை மேற்கொள்ளல் மற்றும் இளங்கன்றுகளையும், வயது முதிர்ந்த எருமைகளையும் பராமரித்தல் ஆகிய பணிகளை தொழுவின் பணியாட்கள் மேற்கொண்டிருந்தனர்.

கருந்தேவகத்தி தன் குறும்பினை சூரல் கொடியினில் படர்ந்திருக்கும் ஈங்கைக் கொடியினை சூரலின் அடியினை அப்படியே மண்ணிலிருந்து அகற்றி, பிரிக்க இயலா சிக்கு நிலையிலான போர்வை போன்ற ஒரு சூரல் மதிலினைக் கொண்டு அமைத்திருந்தார்;. அது ஒரு ஆளுயரம் கொண்டது. ஈங்கையின் வேரும், சூரலின் வேரும் மண்ணில் ஊடுருவி தங்களை மீண்டும் வலுப்படுத்திக்கொள்வதுடன் மதிலினையும் வலுவாக்கும். ஈங்கையும் சூரலும் புலியையே தடுக்கும் ஆற்றலுடைய எதிர் அடுக்கிலான முட்கள் கொண்டவை என்பதால் அம்மதிலைக் கடப்பது அவ்வளவு எளிதல்ல.
கருந்தேவகத்தியின் குறும்பிற்கு உள்ளே பல தொழுவங்கள் நிழல்தரும் பந்தல்களோடு அமைந்திருந்தன. கன்று ஈனும் தருவாயில் உள்ள எருமைகளையும், ஈன்ற எருமைகளையும பாதுகாக்க அவை அமைக்கப்பட்டிருந்தன. உழலை மரம் கொண்ட ஒரு பெருவாயிலின் வழியாகவே குறும்பினுள் நுழையவும் வெளியேறவும் முடியும். அப்பெருவாயிலும் கடுங்காவல் கொண்டது. மேய்ச்சலாள்கள் தொழுவினையும், தோள் வலிமிக்கவர்கள் குறும்பினையும் காத்தனர். சூரல் மதில், காவல்புரியும் தோள்வலுமிக்க குறும்பர்கள், தொழுகாப்பாளர் என மூவடுக்கினைத் தாண்டித் தொழுவினைத் தொடுவது என்பது 'யானை வாயிடை கவளம்'' போலாகும். தொழு காப்பவர்களுக்கும், குறும்பு காப்பவர்களுக்கும் துணையாக காவலில் சிறந்த நாய்களும் கருத்தேவகத்தியின் குறும்பில் இருந்தன. அவற்றில் தலைசிறந்தது ' கோவிவன்'' எனும் நாயாகும். அது அவரைப் பிரியாதிருப்பதாகும்.

குறும்பின் காவலினை தோள்வலிமைமிக்க, முப்பதுக்கும் குறையாத எண்ணிக்கையில் குறும்பர்கள் சுழற்சி முறையில் மேற்கொண்டிருந்தனர். ஆக நிரை மேய்த்தல் முதல் கொண்டு குறும்பின் காவல் வரை அனைத்தும் கருந்தேவகத்தியின் கட்டுக்கோப்பான மேற்பார்வையில் இருந்துவந்தது.

கொள்ளையரும் நெருங்கத் தயங்கும், குறும்பின்; மீது கள்வெறி கொண்ட கள்வர்களின் கண்பட்ட நாளும் வந்தது. கள்வெறி கொண்ட கள்வர்கள் இலக்கற்றவர்கள். மொந்தைக் கள்ளிற்காக மந்தையையே கவர்ந்து செல்பவர்கள். மந்தை காப்போரை மறைந்திருந்து தாக்கிக் கொல்பவர்கள். கண் பார்க்கும் திசையில் எதிர்ப்படும் நிரைகளை சடுதியில் கைப்பற்றுபவர்கள். சிறு குழுவாகவோ அல்லது தனி ஒருவராகவோ கூட மந்தையைக் கைப்பற்றத் துணிபவர்கள். கிடைக்கும் ஆயுதங்களைக் கையாள்பவர்கள். பிணத்தினை மொய்க்கும் செந்நிறத் தலைகொண்ட எருவைக் கழுகுகள் போல் காவலில் குறைந்த குறும்புகளை, பகல் குறிப்பறிந்து, இரவினில் குறும்புக் காவலர்கள் அலறத் தாக்கி நிரை கவர்ந்து செல்லும் கொலை பாதகத்திற்கும் தயங்காதவர்கள்.

அந்தி சாய்ந்தது. பெருவீடு முடித்து திரும்பின எருமை நிரைகள். அவை குறும்பினில் நுழைந்து தொழுவினை அடைவதையும், சிறுவீடு முடித்திருந்த நிரைகளை ஏற்கனவே தொழுவினில் அடைக்கப்பட்டிருந்ததையும், காவலர்களுக்கான இரவு உணவு, நீருக்குரிய ஏற்பாட்டினையும் முறையாக உள்ளதை உறுதிப்படுத்திக் கொண்டு, குறும்பின் வெளிச்சத்திற்காக ஆங்காங்கே நிறுத்தப்பட்டிருந்த விளக்குத் தூண்களில் இலுப்பை எண்ணெய்யினை நிரப்பி விளக்கேற்றுவதை துரிதப்படுத்திவிட்டு வீடு திரும்ப பீர்க்கங்; குன்றேறியிருந்தார்; கருந்தேவகத்தி.

ஆதவன் மேற்கடைந்திருந்த அன்றைய பகல்;வேளையின் கடைசி நாழிகைப் பொழுது. குன்றின் உச்சியினை அடைந்து கிழக்கின் அடிவாரத்;தினை அவர் நோக்கும்போது சரியாக செந்நிற ஆதவன் அவர் தலையின் பின்புறம் சுடரெனத் தோன்றினான். வலது கரத்தில் நெடுங்கழி கொண்ட மூவிலைவேல், கால்களில்; வீரக்கழல்கள்;;, வெண்ணிறக் கீழாடையும், வெண்ணிறத் தலைப்பாகையும் அணிந்து முல்லை நிலத் தெய்வம் நெடுமாலென கருந்தேவகத்தி தோன்றினார். அன்றாடக் காட்சியாக கருந்தேவகத்தியின் அந்திவேளை வீடு திரும்புகையினை எடுத்தனூரார் கண்டு இன்புறுவர். கருந்தேவகத்தியின் இருபத்து மூன்றாம் அகவையின் போது எடுத்தனூர் மன்றிலிருந்து களவாடப்பட்ட ஆநிரைகளை கள்வரிடமிருந்து மீட்டுத் திரும்பியதிலிருந்து, அவரது வில்லாற்றல் மற்றும் வாளாண்மையின் பெருமை

கொன்றை நாடு மட்டுமின்றி கள்வர் காலடிபடும் நிலமெங்கும் பரவிக் கிடந்தது. அன்றிலிருந்து எடுத்தனூர் மண்ணில் மக்கள் எவ்வித இன்னலுமின்றி இன்புற்று வாழ்ந்துவரக் கருந்தேவகத்தியே காரணம் என்பதால் எடுத்தனூராரின் நம்பிக்கையின் அடையாளமாகத் திகழ்ந்தார்.
குன்றின் மீதிருந்து பார்க்கையில் தெரு விளக்குத் தூண்களின் வெளிச்சத்தில் மஞ்சள் மயமாகத் தெரிந்தது எடுத்தனூர். அங்கொன்றும் இங்கொன்றும் வரிசையில்லாத எண்ணற்ற குடில்களின் வாயில் விளக்கு மாடங்களும் மஞ்சளுக்கு வலுவூட்டின. அம்மஞ்சள் நிறத்தின் மத்தியில்; தனது மனையாள் கொற்றியின் வட்ட முகம் தோன்றியது அவருக்கு. கொற்றி நினைவுக்கு வந்தவுடன் அவரது ஆசை மகன் அதியன் தன் பொக்கை வாய்ச் சிரிப்போடு தோன்றினான். அவன் சிரிக்கையில் வலது கன்னத்தின் கீழ்ப்புறம் விண்மீன் வடிவில் விழும் குழியில் தான் விழுந்து தடுமாறுவதாக அடிக்கடி தன் மனையாளிடம் சொல்லி மகிழ்வது நினைவுக்கு வருவதை அசையிட்டுக்கொண்டே குன்றிரங்கி வீடு நெருங்கினார். கார்காலம் முடிந்து முன்பனியின் தொடக்க காலம் என்பதால் அந்தி வேளையில் தெருக்களில் சிறுபிள்ளைகளின்; முகங்களைக் காண முடியவில்லை. மேய்ச்சலுக்கு சென்று திரும்பும் ஆண்கள், காட்டு விறகு சேகரித்துத் திரும்பும் பெண்கள், தயிர் மோர் விற்றுத் திரும்பும் பெண்கள் என பெரியவர்களின் நடமாட்டம் மட்டும் இருந்தது. அடம்பிடித்;த அழுகையும், உடன்பிறப்புகளோடு ஓடி விளையாடும் மகிழ்ச்சியுமாக குழந்தைகள் குடில்களுக்குள்ளே குரலெழுப்பிக்கொண்டிருந்தனர். தொழுவத்திற்குள் அடையாது அங்குமிங்கும் தன்னை அலைகழிக்கும் மறிகளை அதட்டிக்கொண்டிருந்தான் ஒருவன். சூடேறிய பசுவின் நெய்யில் கடுகினை இட்டுத் தாளிக்கும் மணத்துடன் "குய்" என்ற ஓசை ஒரு குடிசையின் முன்வாயிலில் எரிந்துகொண்டிருந்த அடுப்பினில் இரவு உணவினை ஒருத்தி சமைத்துக்கொண்டிருந்த திசையிலிருந்து வந்தது. எதிர்ப்பட்ட ஒவ்வொருவரிடமும் விரைவான நடையுடன் அவரவர் நலம் குறித்து விசாரித்துக்கொண்டே வந்தார். அவர்களும் துரிதமாக பதிலுரைத்தனர். காலை வேளையின் அவசரம் இரவுகளில் எப்போதும் இருப்பதில்லை. இரவென்பது ஓய்விற்கானது என்பதால் தான் அனைத்தும் அவசரத்திற்கு மாற்றாக அமைதியாய் நடக்கின்றவோ என்று உள்;ர எண்ணிக்கொண்டே இவ்வளவு காட்சிகளையும் கடந்து ஊர் மன்றத்தின் அருகில் உயரமான மேடையின் மீது அமைந்திருக்கும் தனது வீட்டினை அடைந்தார். முசுண்டைக் கொடி படர்ந்த நொச்சி வேலியிட்டு, ஊகம்புல் வேய்ந்த பெரிய கூரை வீடு அது. வெண்பனியினூடே தெரியும் விண்மீன்கள் போல நொச்சி வேலியில் முசுண்டை மலர்கள் அவரை பார்த்துச் சிரித்தன.

தகப்பனின் நடையோசை கேட்டதும், மழலைச் சிரிப்போடும் தளிர் நடையோடும் வாயில் தாண்டி ஓடி வந்தான் அதியன். அதியன் கருந்தேவகத்தியின் பால்குடி மறவா பாலகன். மூவிலைவேலினை வாயில் பந்தலில் சாய்த்துவிட்டு, ஓடி வந்தவனை இரு கைகள் ஏந்தி தூக்கியவர், அவன் பின்னால் வந்த கொற்றியை ஒரு கண்ணால் பார்த்துப் புன்னகையுடன் தன்னண்டை அழைத்தார். ஆநிரை மீட்டுத் திரும்பிய இருபத்து மூன்றாம் அகவையில் ஆளாளுக்குத் தன் மகளை கருந்தேவகத்திக்கு மணமுடிக்க போட்டியிட்ட நிலையில், போட்டியின்றி கருந்தேவகத்தியால் கரம்பிடிக்கப்பட்டவள் கொற்றி. பெயருக்கேற்றாற்போல் தீர்க்கமானப்பார்வை, நெடு உயரம். வட்ட முகம், கூரிய நாசி, அதிரலின் அரும்பெனப் பற்கள் என பெண்மைக்குரிய அனைத்து அழகும் பெற்றவள். இல்லறம் ஏற்ற இரண்டாம் ஆண்டினில் அதியனைப் பெற்றெடுத்தாள். தற்போது அதியன் அவனது இரண்டாம் அகவையில் இருக்கிறான். அவள் அருகில் வருவதற்குள் அதியனை மார்போடு இடது கையால் அணைத்துக்கொண்டு, வலது கைக்கொண்டு நொச்சி வேலியோரம் வைக்கப்பட்டிருந்த பானையிலிருந்த நீரில் கால்களை மண் குவளைகொண்டு கழுவிக்கொண்டார். முகத்தினை வலது கையாலேயே கழுவிக்கொண்டு, சிறிது நீரெடுத்து வாய் கொப்புளித்து அந்நீரை வேலியோரம் பீய்ச்சிக்கொண்டே, அருகில் வந்த கொற்றியினை குறுமுறுவலோடு காதலுடன் நோக்கினார்.

முல்லைப் பூக்களை தோன்றிப் பூக்களோடு இணைத்துச் சூடிய கொண்டையுடன், தங்கத்தின் இழை படர்ந்த வெண்பாறையினை ஒத்த சேலையணிந்து அணங்கினைப் போன்ற அழகுடன் அன்ன நடையிட்டு, நீர்மோருடைய மொந்தையினை ஒரு கையிலும், கணவனின் முகம் துடைக்க ஏதுவாக சேலை தலைப்பினை ஒரு கையிலுமாக வந்த கொற்றியினை தன் வலது கையால் புன்னகையோடு இழுத்தணைத்தார். இருவரது புன்னகையும் குறுநகையானது. திடீர் அணைப்பினால் கொற்றியின் அங்கங்களில் ஏற்பட்ட அதிர்வினால் அவளது கிளிஞ்சிலிலான கைவளைகள் குலுங்கின. கூடவே அவர்களின் அணைப்போடு அதியனும் குலுங்கினான்;. அக்குலுங்கல் அவனுக்கு குதூகலத்தை ஊட்டவே மழலைச் சிரிப்பினை வெடித்தான்.

(தொடரும்)



# சேலத்தில் இராவணனுக்கு கோயில்

## திரு. சிவலிங்கம் RI



வட இந்தியாவில் இராவணன் வழிபாடு இன்றும் சில தொல்குடிகளிடையே உள்ளது. மத்தியப் பிரதேசத்தில் தங்கள் குலப் பெண்ணை மணந்ததால், இராவணனை மருமகனாக வழிபடும் வழக்கம் இருந்து வருகிறது.

இந்திய அளவில் மிகவும் பிரபலமான ஆறு இராவணன் கோயில்கள் உள்ளன...

1) பிஸ்ரக் ராவண மந்திர், உத்தரபிரதேசம்
2) ராவன்கிராம் கோயில், விதிஷா, மத்தியப் பிரதேசம்
3) ராவன்கிராம் ராவணன் கோயில், மண்ட்சூர், மத்தியப் பிரதேசம்
4) மாண்டோர் ராவன் மந்திர், ஜோத்பூர், ராஜஸ்தான்
5) காக்கிநாடா ராவணன் கோவில், ஆந்திரப் பிரதேசம்
6) தஷானன் ராவணன் கோவில், கான்பூர், உத்தரபிரதேசம்.

தமிழகத்தில் குறிப்பாக மூன்று இடங்களில் இராவணனுக்கு கோயில்கள் உள்ளன,

1) இராவணன் கோயில் லீபஜார், சேலம்.
2) ராவணன் வீடு, அன்னசாகரம்,கிருஷ்ணகிரி மாவட்டம்.
3) இராவணன் கோயில்,.வீ.மீனாட்சி புரம், மதுரை

சேலம் லீபஜார் பகுதியை ஒட்டி வேளாண்மை கூட்டுறவு குடோன் ஒட்டி செல்லும் சாலையின் உள்ளே சென்றால் , இராவனேஸ்வரன் நகர் உள்ளே இருப்பு பாதையை ஒட்டி உள்ள குடியிருப்பு பகுதியில் இந்த இராவனேஸ்வரன் கோயில் உள்ளது.

இங்கு இராவணன் பத்து தலைகளுடன்



இருபது கைகளுடன் கையில் அழகிய வீணையோடு காட்சிதருகிறார்.

இந்த கோவிலை **25-1-1973** ஆம் வருடத்தில் A.M.முனியப்ப செட்டியார் என்கிற முருகா சாமியின் **60** ஆம் வருட நினைவாக சிலை செய்து கொடுக்க, கோயிலை கட்ட வேலா செட்டி தெருவில் குடியிருந்த K.பார்த்திபன் எனபவர் ரூ. **501** நன்கொடை கொடுக்க கோயில் கட்டடப்பட்டு உள்ளது.

இராவண வணக்கம் இலங்கையில் புகழ்பெற்று இருந்தாலும், தமிழகத்தில் அவ்வளவாக இல்லை. புராணங்கள் இராவணனை வலிமையையும், சிவா பக்தியும் நிறைந்த அரசன் எனப் புகழ்ந்தாலும், இராமாயண கதைகளின் படி வீழ்ந்த ஒரு பேரரசனாகவே கட்டடப்படுகின்றார். இருப்பினும் இக்கோவில், இராவண வணக்கம் முடைய குழுவோ அல்லது சமூகத்தின் அடையாளமாக இருக்கலாம்.

இந்திய புராணங்களில் மிகவும் சுவாரசியமான பாத்திரங்களில் ஒன்றான ராவணன் பெரும்பாலும் அவனது மோசமான செயல்களுக்காக அறியப்படுகிறான். ஆயினும்கூட, அவர் பூமியில் மிகவும் புத்திசாலி மனிதர் என்பதை புறக்கணிக்க முடியாது. உண்மையில், அவரை பலர் பின்பற்றுபவர்கள் மற்றும் வழிபாட்டாளர்கள் உள்ளனர், அவர்கள் **10** தலை அரசன் ராவணனை நம்புகிறார்கள் மற்றும் அவரை ஒரு தெய்வமாக வணங்குகிறார்கள். மேலும், இந்தியாவில் ராவணனுக்கு அர்ப்பணிக்கப்பட்ட கோவில்கள் உள்ளன, அவை அவசியம் பார்க்க வேண்டும்.

இப்படி இராவணன் சிறப்பு மிக்க சேலத்தில் உள்ள இந்த இராவணன் கோயில் மீது அரச மரம் முளைத்து , சுவர்கள் விரிசல் விட்டு அபாயகரமான நிலையில் உள்ளது.

சிதிலமடைந்த பழமையான சிவாலயங்களையே புனரமைப்பு செய்ய யாரும் முன் வராத நிலையில் தீவிர சிவபக்தரான இராவணன் கோயிலை புதுப்பிக்க யார் முன் வருவார்.?



# மரபாளர்

தடயங்களைத் தேடி



**Social Media Handles:**

Website: https://www.heritager.in/
Instagram: https://www.instagram.com/heritager.in/
Twitter: https://twitter.com/HeritagerIn
Youtube: https://www.youtube.com/@HeritagerIndia
WhatsApp: https://whatsapp.com/channel/0029Va5c6aK7Noa1kPzMjY2O
Linkedin: www.linkedin.com/in/heritager-india